# இளமை துள்ளும் வண்ணங்கள்



பள்ளிக்குச் சென்றால் ஆனந்தம்
புதிய ஃபெவிக்ரில்
ஸ்டூடன்ட்ஸ் போஸ்ட்டர்
கலர்கள் இருந்தால் ஆனந்தம்
பேரானந்தம்!
வண்ணமோ வண்ணம்
அழகான வண்ணம்
பச்சைக் கிளிபோல்
பளிச்சிடும் வண்ணம்
கண்ணைப்பறிக்கும் சிகப்பு, நீலம்
பால்போல்
வெண்மை, பனிபோல் மென்மை
இன்னும் என்ன யோசனை?!!
படங்களை உடனே கையில் எடுப்பீர்
புதிய ஃபெவிக்ரில்
ஸ்டூடன்ட்ஸ் போஸ்ட்டர் கலர்களை
தீட்டுவீர்! பரவசம் அடைவீர்!

(அம்மாவைக் கண்டு மிரளாதீர் கைவண்ணம் பார்ப்பார்,
விலையைக் கேட்பார் அசந்தே போவார்!)



## இலவசம்

பெயின்ட்-எ-போஸ்ட்டர்
இம்முகவரிக்கு எழுதிப் பெறவும் :
ஃபெவிக்ரில், போஸ்ட் பாக்ஸ் 17437,
அந்தேரி (கிழக்கு), பம்பாய்-400 059.

புதிய
# ஃபெவிக்ரில்
ஸ்டூடன்ட்ஸ்
போஸ்ட்டர் கலர்கள்




everest/91/PIL/117 tm

பெயர் ______ வயது ______
முகவரி ______
______
பள்ளிக்கூடம் ______

CDM

# GET OFF TO A FLYING START *with*



LION
## PREMIER® HB PENCILS

Supersmooth for effortless writing. Micronized lead for unbreakable points. Grace the desks of executives and others with style.




LION
## PINKY® PENCILS

Perfect classmates. Pretty & Practical. Colourful designs, strongly bonded lead for unbreakable points, give it an edge over the competition.








LION *Gee-flo®* BALLPENS
035 carbine 050 carborite

**Tungsten carbide tips.**
Made with Swiss technology.
Unbeatable points. Sharp. Smooth. Non-smudging. Race across the page. Choice of red, black and blue refills. Mini-marvels at a marvellous price.






**LION PENCILS LTD.**
95, Parijat Marine Drive, Bombay 400 002.




**OFFICIAL LICENSEE OF THE WORLD CUP**

National-766

# புதிய பாரீஸ் மில்க் பிஸ்கட் புதிர்












பாரீஸ்

மில்க் பிஸ்கட்டில் புதுமை..

இதில் ஏற்பட்டுள்ள மாற்றம் புதிய, கவர்ச்சியான

பாக்கெட் மட்டுமல்ல.. உள்ளே இருப்பதிலும் கூட!

மேலும் சத்து நிறைந்த, புதிய பாரீஸ் மில்க் பிஸ்கட்.. இப்போது

மேலும் மொறுமொறுவென்று, மேலும் புதுமையாக,

மேலும் சுவையாக!



## சந்தாதாரர்களுக்கு ஒரு வேண்டுகோள்

எங்களுக்கு அம்புலிமாமாவிற்கும் அதன் மற்ற மொழிப் பதிப்புகளான சந்தமாமாவிற்கும் ஆயிரக்கணக்கான சந்தாதாரர்கள் இருக்கிறார்கள். எனவே உறைகளின் மீது முகவரியைக் குறிப்பது போன்ற பணிகளை முந்தைய மாத முதல் வாரத்திற்குள்ளேயே செய்ய வேண்டியுள்ளது. ஆகையால் தாமதம் இல்லாமல் நீங்கள் உங்கள் பிரதிகளைப் பெற வேண்டும் என்றால் உங்களது முகவரியில் மாற்றம் ஏதாவது இருந்தால் உடனேயே எமக்குத் தெரிவிக்க வேண்டியது மிகமிக அவசியம். உங்களுக்குச் சிறந்த முறையில் பணியாற்ற உதவ வேண்டுகிறோம்.

**டால்டன் ஏஜன்சீஸ்,**
சந்தாதாரர் பிரிவு
சந்தமாமா பில்டிங்ஸ்
சென்னை-600 026



விடை: மூன்றுமே சரி!



# மங்கை



ஜூன்' 92

☆ 'நீ எனக்கு நான் உனக்கு'

*புதிய தொடர்கதை*

☆ கோடைக்கேற்ற குளிர் பானங்கள்

☆ வண்ண வண்ண கைவினைக் கலை

☆ அபூர்வ சகோதரிகள்

மற்றும் வழக்கமான பகுதிகள்

விலை ரூ. 6/-





# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி


## பூவுலகத்தைப் பாதுகாப்போம்

பூதலத்தைக் காக்கும் முயற்சியில் இந்த ஆண்டு ஜூன் மாதம் ரியோடி ஜானிரோவில் கூடும் பூ உலக உச்சி மாநாட்டின் முடிவுகளை யாவரும் ஆவலுடன் எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறோர்கள். இம்மாநாட்டில் உலகின் எல்லாப்பகுதிகளிலும் உள்ள தலைவர்கள் கலந்து கொள்கிறார்கள்?

செய்தித்தாள்களில் உலக வெப்ப அதிகரிப்பு, விஷ வாயு வெளிவிடுதல், பருவகால மாற்றம் என்றெல் லாம் செய்திகளைக் காண்கிறோம். அவற்றால் பூமி அழிந்து கொண்டு போகிறது என்பது தெரிகிறது. இந்த அழிவைத் தடுக்க இப்போதுள்ளவர்களும் வருங்கால சந்ததியினரும் தக்க நடவடிக்கை எடுத்துப் பாதுகாக்கா விட்டால் பயங்கரக் கரிவாயு பூதலத்தில் பரவி அது மனிதர்களையும் மற்ற உயிரினங்களையும் தாவரங் களையும் அழித்துவிடும்.

நமது வாழ்க்கை இயற்கை சூழ்நிலை யைப் பொறுத்து அமைவது. ஆனால் இயற்கைச் செல்வங்கள் இப்போது தொடர்ந்து அழிக்கப்பட்டு வருகின்றன. மரம் செடிகள் காடுகள் வெட்டி அழிக்கப்படுகின்றன. ஒரு மரத்தை வெட்டியபின் , வேறொரு மரத்தை அங்கு வளர்க்க முயல்வதில்லை. ஒரு மரம் வெட்டினால் அந்த இடத் தில் இரண்டு மரங்களை நட்டு வளர்க்க வேண்டும் என இப்போது வலியுறுத்தப் படுகிறது.

இது எளிதில் செய்யக் கூடியதே. மரங்கள் யாருடைய நினைவிலாவது நட்டு வளர்ப்பதும் ஒரு உயரிய செயலே. இம்மாதிரி திட்டத்தை நினைவுவனம் என்ற பெயரில் உத்திரப்பிரதேச அரசாங்கம் அறிவித்து அமல்படுத்தி வருகிறது.

இது புதிய முயற்சி. வரவேற்கத்தக்கதாகும்.


மதிமுகம்: 90 ஜூன் 1992 புன்னகை: 6

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00


CHITRA

# புதிய குடியரசு மொரீஷஸ்





இந்த ஆண்டு மார்ச் 12ந்தேதி மொரீஷஸ் தன்னைக் குடியரசு நாடாக அறிவித்தது. 1968ல் மார்ச் 12ல் ஆங்கிலேயர் ஆட்சியிலிருந்து விடுதலை பெற்ற மொரீஷஸ் இங்கிலாந்து ராணியின் பிரதிநிதியை கவர்னர் ஜெனரலாகக் கொண்டு அரசாங்கம் நடத்தி வந்தது.

முதலாவது பிரதமமந்திரியாக மொரீஷஸ் நாட்டுத் தந்தை என அழைக்கப்பட்ட சர். சிவசாகர்ராம் குலாம் 1968ல் பதவி ஏற்றார். அவருக்குப்பின் 1982ல் அனிருத்த ஜகன் நாத் பிரதம மந்திரியானார். அவர் மொரீஸஸைக் குடியரசு நாடாக்குவது என உறுதிபூண்டார்.

1987ல் நடந்த தேர்தலுக்குப் பின் ஜகன்நாத் கூட்டு மந்திரிசபையை அமைத்தார். இவர் பிரதம மந்திரியாக இருந்து கொண்டு சர் வீராசாமியைத் தலைவராக இருக்கச் செய்தார். மொரீஷஸ் அரசியல் சட்டம் இந்திய அரசியல் சட்டம் போல இயற்றப்பட்டது. ஆனால் மக்கள் சபை என ஒன்று தான் அமைக்கப்பட்டது.

மொரீஷஸ் தீவு இந்து மகாசமுத்திரத்தில் தெற்கே ஆப்பிரிக்காவின் பக்கம் 1865 சதுரகி.மீ பரப்பளவு கொண்டது. இத்தீவை 10வது நூற்றாண்டில் அராபிய மாலுமிகள் கண்டு

பிடித்தார்களாம். அதற்கு ஆறு நூற்றாண்டுகளுக்குப்பின் போர்த்துக்கீசியரும் 16வது நூற்றாண்டின் இறுதியில் டச்சுக்காரர்களும் இங்கு வந்தனர். டச்சுக்காரர்கள் இங்கு விவசாயம் செய்து இத்தீவைத் தம் வியாபாரத்திற்குப் பயன்படுத்தினார்கள். நூறு வருடங்களுக்குப்பின் இதனைவிட்டு அவர்கள் போய்விட்டார்கள்.

இதற்குப் பின் இத்தீவு பிரான்ஸின் வசமாகியது. 1810ல் பிரிட்டிஷார் இதனைக் கைப்பற்றினார்கள். அதன் பிறகு சுமார் 160 ஆண்டு காலம் இது பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் இருந்தது.

இத்தீவின் மக்கள் தொகை 11 லட்சம் இதில் 68 சதவீதம் இந்திய இனத்தவர். ஆங்கிலமும், பிரெஞ்சும் இதன் ஆட்சி மொழிகள். தமிழ், ஹிந்தி, குஜராத்தி, உருது, போஜபுரி ஆகிய மொழிகளும் இங்கு பேசப்படுகின்றன. இத்தீவைச் சுற்றிப் பல சிறிய தீவுகளும் உள்ளன. ஒவ்வொரு தீவிலும் சிவனுக்கும், பிள்ளையாருக்கும் முருகனுக்கும் கோவில்கள் உள்ளன. ஆண்டுதோறும் தைப்பூசக் காவடி, சித்திரைக் காவடி விழாக்கள் நடக்கின்றன. நாதசுர இசை இசைக்கப்படுகிறது. சிவராத்திரி, ஹோலி, தீபாவளி ஆகிய பண்டிகைகள் கொண்டாடப்படுகின்றன.

சுற்றுலாப் பயணிகள் இத்தீவை 'சமுத்திர முத்துமாலை' எனப் புகழ்கிறார்கள். எங்கும் பச்சைப்பசேரென்ற செடிகள், மரங்கள், வண்ண வண்ண மலர்கள் அழகான காட்சியை உருவாக்குகின்றன. இதைக்கண்டு ஆங்கில எழுத்தாளர் மார்க்ட்வெயின் "கடவுள் மொரீஷஸ் தீவைக் கண்டு விட்டுத்தான் சொர்க்க லோகத்தை உருவாக்கி இருக்க வேண்டும்" என எழுதினார்.






# இனிக்கும் வாழ்வு

**கா**ட்டூரில் கந்தப்பன் ஒரு பெரிய வியாபாரி. அவன் தன் மனைவி கண்ணம்மாவுடனும் மகன் சேகரனுடனும் மகள் மங்களத்துடன் நன்கு வாழ்ந்து வந்தான். சேகரனுக்குப் பதினெட்டு வயதாகும் போது அவன் தன் தந்தையோடு வியாபாரத்தில் ஈடுபட்டு அதன் நெளிவு சுளிவுகளை எல்லாம் தெரிந்து கொண்டான். சேகரனைத் தம் மாப்பிள்ளையாக்கிக் கொள்ளப் பல பணக்காரரர்கள் போட்டி பேரட்டுக் கொண்டு வந்தார்கள்.

கண்ணம்மாளும் மங்களமும் சேகரனுக்குப் பணக்கார வீட்டுப் பெண்ணைத் தேர்ந்தெடுத்து விவாகம் செய்து வைக்க விரும்பினார்கள். கந்தசாமியோ தனக்கு வியாபாரம் ஆரம்பிக்கக் கடன் கொடுத்து உதவிய ராமநாதனின் மகள் லட்சுமியைத் தன் வீட்டு மருமகளாக்கிக் கொள்ள வேண்டும் என்றே விரும்பினான்.

கண்ணம்மா அவனிடம் தன் மகனுக்கு லட்ச ரூபாய் வரதட்சனை கொடுக்க முன்வந்துள்ள கோபாலசாமியின் மகளை ஏற்கும்படி கூறினாள். கந்தசாமியோ "பணம் பெரிது அல்ல. குணம் வேண்டும். ராமநாதன் இப்போது சிரமதிசையில் இருக்கிறான். ஆனால் அவன் முன்பு எனக்குக் கொடுத்த பணத்தால்தான் நான் முன்னுக்கு வந்திருக்கிறேன். அப்போதே நான் அவன் மகள் லட்சுமியை என் மருமகளாக ஏற்பதாகக் கூறிவிட்டேன் அதன்படித்தான் நடக்க வேண்டும்'' என்றான்.

கண்ணம்மாவோ "நமக்கு லட்ச ரூபாய் கிடைப்பதைவிட்டு விட்டு தரித்திரத்தையா கட்டி வைப்பது?'' என்றாள். கந்தசாமியோ "இதோ

—பாபநாசம் சாமா—



பார்! நான் ஒன்றும் சேகரனிடம் அவன் லட்சுமியைத்தான் விவாகம் செய்து கொள்ள வேண்டும் என்று வற்புறுத்தப் போவதில்லை. அவன் லட்சுமியைப் பார்த்து அவளைப் பிடிக்கவில்லை என்றாள் அவன் வேறு யாரை வேண்டுமானாலும் கல்யாணம் செய்து கொள்ளட்டும். எனக்கு ஆட்சேபணை இல்லை'' என்றான்.

ஒரு நல்ல நாளில் கந்தசாமி தன் குடும்பத்தினரோடு லட்சுமியைப் பெண் பார்க்க ராமநாதனின் வீட்டிற்குச் சென்றார்கள். லட்சுமியைப் பார்த்துவிட்டு முகத்தைச் சுளித்தார்கள். ஆனால் கந்தசாமி தன் மகனின் விருப்பம் தெரிந்து கொண்டு லட்சுமியையே அவனுக்குக் கல்யாணம் செய்து வைத்தான்.

கண்ணம்மாவும் மங்களமும் தம் வீட்டிற்கு வந்த லட்சுமியைக் கரித்துக் கொட்டினார்கள். ஆனால் கந்தசாமியும் சேகரனும் அவளுக்குப் பரிந்து பேசுவார்கள் எனப் பயந்து பெட்டிப் பாம்பாய் அடங்கிக் கிடந்தார்கள்.

ஆறு மாதங்கள் லட்சுமிக்குச் சுகமாகக் கழிந்தன. ஏழாவது மாதத்தில் கந்தசாமி நோய்வாய்ப்பட்டு இறந்து போனார். அதனால் சேகரன் தன் வியாபாரத்தை கவனிக்க வெகு நேரம் வீட்டை விட்டு வெளியே இருக்க வேண்டியதாயிற்று. அதனால் கண்ணம்மாவும் மங்களமும் சேர்ந்து கொண்டு லட்சுமியைப் படாதபாடு படுத்தினார்கள். திட்டினார்கள். வீட்டு வேலைகளை எல்லாம் அவள் மீது சுமத்திவிட்டு வேளா வேளைக்குச் சாப்பிட்டு விட்டு ஊர் சுற்றினார்கள்.

லட்சுமி எல்லாவற்றையும் பொறுமையுடன் சகித்துக் கொண்டு வாய் பேசாமல் இருந்தாள். அவள் தன் கணவனிடம் தன் மாமியாரும், மங்களமும் சேர்ந்து செய்யும் கொடுமைகளைக் கூறவும் இல்லை.

ஒருமுறை லட்சுமி கடுமையான காய்ச்சலால் கஷ்டப்பட்டுக் கொண்டே வீட்டு வேலைகளையும் செய்து கொண்டிருந்தாள். அப்

போது கண்ணம்மா "ஏய் லட்சுமி! நானும் மங்களமும் நாளைக் காலையில் கபிலமலைக் கோவிலுக்கு போகப் போகிறோம். அதனால் நீ விடியற்காலையில் எழுந்து எங்களுக்குச் சர்க்கரைப் பொங்கல் தயார் செய்து கொடு. அதில் முந்திரி, திராட்சை ஏலக்காய் எல்லாம் தூக்கலாக இருக்க வேண்டும், எடுத்தால் நெய் சொட்ட வேண்டும்" என்று கூறிவிட்டுப் போனாள்.

அன்றிரவு படுத்த லட்சுமிக்கோ காய்ச்சல் அதிகமானது. இரவில் நேரம் கழித்து வந்த சேகரன் இதைக் கவனித்தான். மறுநாள் விடியற்காலையிலேயே தட்டுத் தடுமாறி எழுந்து அவள் செல்வதை சேகரன் கண்டான். அவனும் அவள் பின்னாலேயே சென்றான். அவள் தடுமாறிக் கீழே விழப் போகையில் அவன் சட்டென அவளைத் தாங்கிப் பிடித்தான். உடம்பு நெருப்பாக் காய்வது கண்டு அவன் "இந்தக் காய்ச்சலில் ஏன் விடிவதற்கு முன் ஏழுந்து வேலை செய்யப் போனாய்?" என்று கேட்டான்.

லட்சுமியும் தன் மாமியார் முந்தின தின இரவில் போட்ட கட்டளையைக் கூறினாள். அப்போது சேகரன் "நேற்றே உனக்கு காய்ச்சல் இருப்பது தெரிந்துமா அப்படிச் சொன்னாள்? உன்னை இங்கே விட்டு விட்டு அவர்கள் மலைக்கோவிலுக்குப் போகிறார்களா? அங்கே சாப்பிட சர்க்கரைப் பொங்கல் வேண்டுமா? நீ போய்ப் படு. நான் சர்க்கரைப் பொங்கல் தயாரித்துக் கொடுக்கிறேன். அதைச்






கொண்டு போய் அவர்களிடம் கொடு'' எனக் கூறி அவளைப் படுக்கையில் படுக்க வைத்தான்.

அவன் சமையலறைக்குள் அரை மணி நேரம் இருந்து ஒரு தூக்கை எடுத்து வந்தான். அதை லட்சுமியிடம் கொடுத்து ''இந்தச் சர்க்கரைப் பொங்கலை அவர்களிடம் கொடு'' என்றான். லட்சுமியும் அவ்வாறே செய்ய கண்ணம்மாவும் மங்களமும் லட்சுமி கொடுத்த தூக்கை வாங்கிக் கொண்டு வண்டியில் ஏறி உட்கார்ந்தார்கள்.

அவர்கள் ''நாங்கள் ராத்திரி எட்டு மணிக்கு வந்து விடுவோம். அப்போது சாப்பாடு தயாராக இருக்க வேண்டும். தெரிந்ததா?'' என்று கூறிவிட்டுக் கிளம்பிப் போய் விட்டார்கள். சேகரனோ வைத்தியரை அழைத்து லட்சுமிக்கு மருந்து கொடுக்கும்படிக் கூறினான். அவரும் லட்சுமியின் நாடியைப் பிடித்துப் பார்த்துவிட்டு ''இவளுக்கு இந்தக் காய்ச்சல் மூன்று நாட்களாக இருந்திருக்க வேண்டுமே. யாருமே கவனிக்கவில்லையா? பரவாயில்லை. இப்போதாவது என்னை அழைத்து வந்தாயே'' என்று கூறி மருந்தைக் கொடுத்து விட்டுப் போனார்.

சேகரனும் தன் மனைவிக்கு வைத்தியர் கூறியபடி மருந்தைக் கொடுத்து ஆகாரமாகக் கஞ்சியும் வைத்துக் கொடுத்தான். அப்போதுதான் அவனுக்குத் தன் தாயும் தங்கையும் சேர்ந்து லட்சுமியை எப்படி நடத்தியிருக்கிறார்கள் என்பது புரிந்தது. அவர்களது அடாத செயலுக்கு முற்றுப்புள்ளி வைக்கத் தீர்மானித்தான்.

அன்றிரவு எட்டு மணிக்கு மலைக் கோவிலிருந்து வந்த கண்ணம்மாவும் மங்களமும் ''ஏய் லட்சுமி! எங்களைப் பட்டினி போட்டுக் கொல்லவா நினைத்தாய்? சர்க்கரைப் பொங்கல் செய்யச் சொன்னால் என்ன செய்து கொடுத்தாய்? வெறும் சாதத்தைத்தானே! அதில் வெல்லமோ முந்திரியோ, திராட்சையோ ஏலக்காயோ எதுவும் இருக்கவில்லையே. சப்பென்று இருப்பதை எப்படிச் சாப்பிடுவது என்று நினைத்தாய்?'' என்று இரைந்தார்கள்.

அவர்கள் இருவரும் கூறியதைக் கேட்டுக் கொண்டே சேகரன் வீட்டினுள் வந்தான். அவன் தன் தாயாரைப் பார்த்து "ஏனம்மா கூச்சல் போடுகிறாய்? உனக்கு உன் வீட்டில் காய்ச்சலாக இருக்கும் உன் மருமகளிடம் இரக்கம் இல்லை. எழுந்துகூட நடக்க சிரமப்பட்ட அவளை விடியற்காலையில் எழுந்து உங்கள் இருவருக்கும் மலைக்கோவிலில் சாப்பிடுவதற்காகச் சர்க்கரைப் பொங்கல் தயாரிக்கச் சொன்னாய். ஆனால் அவள் அதைத் தயாரிக்கவில்லை. நான் தான் தயாரித்தேன். அதில் வெல்லம் இல்லாததால் 'சப்'பென்று இருந்தது எனக்கோபித்துக் கொண்டாயே. இந்த வீட்டில் நீ பரிவோ பாசமோ இரக்கமோ இல்லாது நடப்பதால் வாழ்க்கையே சப்பென்று ஆகிவிட்டது. இனியும் என்னால் பொறுக்க முடியாது. நீ உன் மகளை அழைத்துக் கொண்டு தனியாக வேறு எங்காவது போய் இரு. இவ்வளவு நாட்களாக நீங்கள் அவளுக்குக் கொடுத்த தொல்லை போதும்" என்றான்.

அதைக் கேட்ட கண்ணம்மாவும் மங்களமும் திடுக்கிட்டு பயந்து போனார்கள். அப்போது லட்சுமி "வேண்டாம். அவர்கள் இந்த வீட்டிலேயே இருக்கட்டும். நம் வீட்டு விஷயம் அம்பலத்திற்குப் போக வேண்டாம்" என்று கூறினாள்.

அதைக் கேட்ட கண்ணம்மாளும் மங்களமும் "லட்சுமி உன் பெரிய மனதை எப்படிப் பாராட்டுவது? எங்களுக்கு புத்தி வந்தது. இனிமேல் நாங்கள் உன்னைக் கொடுமைப் படுத்த மாட்டோம். இதுவரை நாங்கள் செய்தவற்றை மறந்து மன்னித்து விடு" என்று வேண்டினார்கள்.

சேகரனும் தான் கொடுத்த அதிர்ச்சி வைத்தியம் நல்ல பலன் அளித்தது கண்டு மகிழ்ந்தான். இதற்குப் பின் கண்ணம்மாளும் மங்களமும் லட்சுமியிடம் அன்புடன் இருந்தார்கள்.



# நியமனத்தின் காரணம்

மந்திரகிரி ஜமீன்தாரருக்குத் தம் ஊர் ஆற்றில் தினமும் மாலை வேளையில் படகில் சென்று வரவேண்டுமென்று ஆசை. அதற்காக ஒரு படகோட்டியைத் தேர்ந்தெடுக்கும்படித் தம் திவானிடம் கூறினார். திவானும் அதற்கான பரீட்சை நடத்தி முடிவில் பொன்னன், சின்னான் என்ற இருவரைத் தேர்ந்தெடுத்து ஜமீன்தாரரிடம் அழைத்துச் சென்றார்.

திவான் அவரிடம் "இவர்கள் இருவரும் திறமை மிக்கவர்களே இந்தப் பொன்னன் படகு ஓட்டுவதிலும் கெட்டிக்காரன். நன்கு நீந்தத் தெரிந்தவன். சின்னானும் நன்கு படகு ஓட்டக் கூடியவன் என்றாலும் அவனுக்கு அவ்வளவாக நீந்தத் தெரியாது" என்றார். ஜமீன்தாரரும் "சரி நாளை வாருங்கள் என் முடிவை சொல்கிறேன்" என்று சொல்லி அந்த இருவரையும் அனுப்பி விட்டு திவானிடம் "நாளை அவர்கள் வந்ததும் சின்னானை வேலையில் நியமித்து விடுங்கள்" என்றார்.

அதுகேட்டு திவான் ஆச்சரியப்பட்டு "சின்னானையா?" எனக் கேட்கவே ஜமீன்தாரரும் "ஆமாம் ஏனென்றால் தனக்கு நீந்தத் தெரியும் என்பதால் பொன்னன் அலட்சியமாக படகை ஓட்டுவான். படகு கவிழ்ந்தாலும் தான் நீந்திக் கரை சேர்ந்து விடலாம் என நினைப்பான். ஆனால் சின்னானுக்கோ அவ்வளவாக நீந்தத் தெரியாததால் படகு கவிழ்ந்தால் தன் உயிர் போய் விடுமோ எனப் பயந்து படகை கவனமாக ஓட்டிச் செல்வான்" என்றார்.






2

*[வீரபுர இளவரசி வித்தியாவதியின் பிறந்த நாள் விழா திடீரென இளவரசியின் உடல் நிலை மோசமாகி விட்டதால் ரத்து செய்யப்பட்டதாக அறிவிக்கப்பட்டது. ஆஸ்தான சோதிடர் வாசஸ்பதியின் யோசனைப்படி இளவரசியை சாரல சரோவரத்தின் மத்தியிலுள்ள வசந்த மாளிகையில் இருக்க மன்னன் அனுப்பி வைத்தான். அங்கிருந்த இளவரசியைக் அவன் காணச் சென்றான். அதற்கு பின்—]*

இளவரசி வித்தியாவதியை முன் தினம் வசந்த மாளிகையில் விட்டு விட்டு வந்த இரு பணிப்பெண்கள் மறுநாள் காலை அவளுக்குத் தேவையான உணவை எடுத்துக் கொண்டு சென்றார்கள். அவர்களைப் படகோட்டி வசந்த மாளிகையில் கொண்டு போய்ச் சேர்த்தான்.

இளவரசி மிகவும் உற்சாகத்துடன் இருந்தாள். அதற்குக் காரணம் முதல் நாளிரவு அவள் நன்கு தூங்கியதே. அது கண்டு அந்த இரு பணிப்பெண்களும் மகிழ்ந்து போயினர். அவர்கள் இளவரசியைக் குளிப்பாட்டி புத்தாடை அணிவித்து உணவைப் பரிமாறினார்கள். இளவரசி அதனை உண்ட பிறகு அவ்விருவரும் அங்கிருந்து திரும்பித் தலைநகருக்குச் சென்றார்கள்.

அரண்மனையில் அவர்கள்



மன்னனிடமும் ராணியிடமும் இள வரசி உற்சாகமாக இருப்பதைக் கூறினார்கள். இளவரசியின் உடல் நிலையில் நல்ல மாற்றம் ஏற்பட் டுள்ளது எனக்கேட்டு மன்னனும் ராணியும் மகிழ்ந்து போயினர். ஆஸ்தான சோதிடர் கூறியபடி நடந்ததால் இளவரசியின் உடல் நிலை தேறி வருகிறது என எண்ணி அவர்கள் மகிழ்ந்தனர்.

இப்படியாக தினமும் இளவர சிக்கு உணவு எடுத்துச் சென்ற பணிப் பெண்கள் அரண்மனை திரும்பி வந்ததும் மன்னனிடமும் ராணி யிடமும் இளவரசியின் ஆரோக்கி யம் மிகவும் தேறிவிட்டதாகக் கூறி னார்கள். அது கேட்டு மகிழ்ந்த மன்னனும் ராணியும் தாம் எப் போது மகளைப் பார்க்கப் போக வேண்டும் எனச் சோதிடர் கூறப் போகிறார் என்பதைக் கேட்க அவர் கள் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

இப்படியாக இருபது நாட்கள் கழிந்தன. இருபத்தொன்றாவது நாள் மாலை சோதிடர் வாசஸ்பதி மன் னனைக் காண வந்தார். மன்னன் உற் சாகத்துடன் இருப்பது கண்டு வாசஸ் பதியும் "அரசே! நீங்கள் நாளை போய் இளவரசியைப் பார்த்து விட்டு வரலாம். மத்தியானத்திற்கு மேல் கிளம்பிப் போய்ப் பார்த்து விட்டு சூரியாஸ்தமனத்திற்குள் நீங் கள் அரண்மனை திரும்பி விட வேண்டும்" என்றார்.

மன்னனும் "அப்படியே செய் கிறேன். வித்தியாவதியின் ஜாதகத் தில் தற்போது கிரக நிலை எப்படி உள்ளது?" என்று கேட்டான். வாசஸ்பதியும் "நானும் என் நண் பர் ஜகன்நாதனும் ஜாதகத்தைப் பரிசீலித்தோம். அவரும் நான் எண்ணுவது போலத்தான் அபிப் பிராயப்படுகிறார். இன்னும் நாற் பது நாட்களில் இளவரசி குண மடைந்து எப்போதும் போலாகி விடு வாள். அதனால் இப்போதைக்கு நீங்கள் கவலைப்படும்படி எதுவும் இல்லை" என்று கூறிவிட்டுச் சென்றார்.

மன்னனும் ராணியும் சோதிடர் கூறியபடியே மதிய உணவு உண்டு

விட்டு சாரஸ சரோவரத்தின் நடுவே உள்ள வசந்த மாளிகைக்குச் சென்றார்கள். அரச தம்பதிகள் இளவரசியைப் பார்க்கக் கிளம்பி விட்டார்கள் என்று கேட்டதும் மக்கள் அவர்கள் செல்லும் சாலையின் இரு புறங்களிலும் நின்று "இளவரசி வாழ்க" என்று கோஷமிட்டுத் தம் நல்லெண்ணத்தை வெளிப்படுத்தினார்கள்.

சாரஸ சரோவரத்தின் கரையில் காத்திருந்த படகோட்டி மன்னனையும் ராணியையும் படகில் ஏற்றிக் கொண்டு வசந்த மாளிகைக்குச் சென்றான். வசந்தமாளிகை வாசலில் அரச தம்பதிகளை வரவேற்க கிழப் பணிப் பெண் கமலம்மாள் காத்து நின்றாள். அவள் படகிலிருந்து இறங்கிய அவ்விருவரையும் வணங்கி மாளிகைக்குள் அழைத்துச் சென்றாள்.

அங்கு ஒரு பெரிய அறையில் வித்தியாவதி இருந்தாள். அவள் அப்போதுதான் தூங்கி எழுந்திருந்தாள். தன் தாய் தந்தையரைக் கண்டதும் ஓடி வந்தாள். ராணியும் அவளைக் கட்டித் தழுவிக் கொண்டு "சௌக்கியமாக இருக்கிறாயா?" என்று கேட்டாள். தம் மகள் சிரித்து நன்கு நடமாடிப் பேசியது கண்டு மன்னனும் ராணியும் மகிழ்ந்து போனார்கள். ராணி தன் மகளை அழைத்துக் கொண்டு மாளிகையின் ஓரத்திலுள்ள பூந்தோட்டத்திற்கு சென்றாள்.

மன்னனும் அவர்களின் பின் செல்ல மூவரும் ஓரிடத்தில் அமர்ந்து வெகுநேரம் வரைபேசிக்





கைக்குச் சென்றார்கள். அப்போது அவர்களை வரவேற்க இளவரசி வித்தியாவதியே வந்திருந்தாள்.

அவன் உடல்நிலை நன்கு தேறியது கண்டு அவர்கள் மகிழ்ந்து அவளோடு பல விஷயங்களைப் பேசிக் களிப்புற்றார்கள். இருட்டும் வேளைக்கு மன்னனும் ராணியும் அங்கிருந்து கிளம்பிப் படகில் அமர்ந்து கரைக்கு வந்தார்கள். தம் மகளின் உடல் நிலை நன்கு தேறிவிட்டாலும் அவளை விட்டுப் பிரிந்து இருக்க வேண்டியுள்ளதே எனக் கவலைப்பட்டவாறே அவர்கள் அரண்மனையை அடைந்தார்கள்.

கொண்டிருந்தார்கள். மாலைப் பொழுது வரவே அவர்கள் மாளிகைக்குள் வந்தனர். மன்னனும் ராணியும் இனி தாம் கிளம்ப வேண்டிய வேளை வந்துவிட்டது எனக்கூறிப் புறப்பட்டார்கள். கமலம்மாளும் அவர்களோடு படகு வரை சென்று அவர்களை அதில் ஏற்றி விட்டாள். படகும் கரை சேர அதிலிருந்து அவர்கள் இறங்கித் தம் அரண்மனையை அடைந்தார்கள்.

மேலும் மூன்று வாரங்கள் கழிந்தன. சோதிடர் வாசஸ்பதி அப்போது அரச தம்பதிகளைக் கண்டு அவர்கள் இளவரசியைக் கண்டு வரலாம் எனக்கூறி அதற்கான நேரத்தையும் குறித்துக் கொடுத்தார். மன்னனும் ராணியும் வசந்த மாளி

இதற்குப்பின் மேலும் மூன்று வாரங்கள் கழிந்தன. மன்னன் சோதிடர் வாசஸ்பதி வருவார் என எதிர்பார்த்துக் காத்துப் பார்த்தார். அவர் வரவில்லை. ராணியோ அவரை உடனே வரவழைக்கச் சொன்னாள். மன்னனும் "சரி, இன்று மாலையே ஒருவனை அனுப்பி அவரை அழைத்து வரச் சொல்கிறேன்" என்றான்.

மன்னன் ஒரு ஆளை அனுப்புவதற்குள் சோதிடரே தன் நண்பரான ஜகன்நாதருடன் மன்னனைக் காண வந்து விட்டார். மன்னன் அவர்களை மகிழ்ச்சியுடன் வரவேற்றான். இருவரும் மன்னன் அளித்த ஆசனங்களில் அமர்ந்தனர். அப்போது வாசஸ்பதி "அரசே! நீங்

கள் இங்கிருந்து கிளம்பிச்சென்று நாளை சூரியோதயத்திற்கு முன்பே உங்களது மகளைப் பார்த்துவிட்டு வந்து விட வேண்டும்'' என்றார்.

மன்னனும் அது கேட்டு ஆச்சரியப்பட்டான். அவ்வளவு விரைவில் போய்ப் பார்க்க அவர் ஏன் சொல்கிறார் என்பது அவனுக்குப் புதிராக இருந்தது. அவன் சோதிடரை அதற்கான காரணம் கேட்பவன் போல் பார்த்தான். சோதிடரும் ''ஆமாம்! நாளை சூரியோதயம் ஆவதற்குள் நீங்கள் வித்தியாவதியைப் பார்த்துவிட்டு வந்துவிட வேண்டும். இந்த நல்ல நேரத்தை தவற விட்டால் இன்னும் தொண்ணூறு நாட்களுக்கு நல்லவேளையே இல்லை. அதுமட்டுமல்ல இளவரசிக்கு இன்னும் மூன்று மாதங்களுக்கு சிரம தசை வரப்போகிறது. அவள் உடல் நிலை ஒன்றும் மோசமாகி விடாது'' என்றுகூறி சற்று நிறுத்தினார்.

வாசஸ்பதியின் நண்பர் ஜகன்நாதரும் ''ஆமாம். நீங்கள் விரைந்து செல்ல வேண்டும். ஏனென்றால் அதற்குத் தக்க காரணம் உள்ளது'' என்றார். மன்னன் காதில் இளவரசியை சூரியோதயத்திற்கு முன் பார்க்க வேண்டும் என்பதைத் தவிர வேறு எதுவும் விழவில்லை. சோதிடர்களும் மன்னனிடம் அப்போதைக்கு தாம் தெரிவிக்க வேண்டியதைக் கூறிவிட்டதாகத் திருப்தி அடைந்து அவனிடம் விடை பெற்றுக் கொண்டு சென்றார்கள்.

மன்னனும் ராணியைக் கண்டு ''சற்று முன்தான் சோதிடர் வந்து





தவற விட்டால் இன்னும் தொண்ணூறு நாட்களுக்கு அவளைப் பார்க்க முடியாதாம்'' என்றான்.

ராணியும் ''அடேயப்பா! அவ்வளவு நாட்களா? ஏன் ஏதாவது கிரக பலன் சரியாக இல்லையா?'' என்று கேட்கவே மன்னனும் ''அப்படித்தான் இருக்க வேண்டும். அது பற்றிப் பிறகு சோதிடரிடம் விவரமாகக் கேட்டுக் கொள்ளலாம். இப்போது நம முதல் வேலை நம் மகளைப் பார்க்கப் போவதே'' என்றான்.

மன்னனும் ராணியும் திடீரென்று கிளம்பி இருட்டில் சாரஸ சரோவரத்தின் கரைக்கு வந்தது கண்டு படகோட்டி ஆச்சரியப்பட்டான். அவர்களது வருகை பற்றி முன்கூட்டியே ஏன் தனக்குத் தகவல் வரவில்லை என்று ஆச்சரியப்பட்டான். ஆனாலும் அவன் தன் வேலையைச் செய்துதானே ஆகவேண்டும். அவன் சற்றும் தாமதிக்காமல் மன்னனையும் ராணியையும் படகில் ஏற்றிக் கொண்டு வசந்த மாளிகையில் கொண்டு போய் விட்டான்.

அப்போது விடியும் வேளை சூரியன் இன்னமும் உதிக்கவில்லை. மன்னனும் ராணியும் வசந்தமாளிகையில் போய் இறங்கினார்கள். அவர்களை வரவேற்க கிழப்பணிப் பெண் கமலம்மாளோ அல்லது இளவரசியோ வரவில்லை. தாம் வருவது பற்றி அவர்களுக்கு முன்

போனார். அவரும் அவரது நண்பரும் நாம் நம் மகளை நாளை சூரியோதயம் ஆவதற்கு முன் பார்த்துவிட வேண்டும் என்று கூறினார்கள். அதனால் அதன்படி நடக்க வேண்டும்'' என்றான். ராணியோ மகிழ்ச்சியுடன் ''நம் மகளைக் காண எப்போது போகச் சொன்னாலும் நாம் போய்த்தானாக வேண்டும். நாளை சூரியோதயம் ஆவதற்கு இரண்டு நாழிகைக்கு முன் நாம் அரண்மனையிலிருந்து கிளம்பினால் போதும் அல்லவா?'' என்று கேட்டாள்.

மன்னனோ ''ஊஹூம். சூரியோதயம் ஆவதற்கு முன் நாம் வசந்த மாளிகைக்குப் போய் நம் மகளைப் பார்த்தாக வேண்டும். இதைத்

கூட்டியே தெரியாததாலால் யாரும் வரவில்லை என எண்ணிக் கொண்டு அவர்கள் மாளிகைக்குள் சென்றார்கள்.

அப்போது பயந்து நடுங்கிக் கொண்டு கமலம்மாள் ஓடி வந்தாள். அவள் மன்னனையும் ராணியை யும் பார்த்ததும் "ஓ! அதற்குள் உங்களுக்குத் தகவல் கிடைத்து விட்டதா?" என நாக்குளற கேட் டாள்.

அதுகேட்டு மன்னன் "தக்வலா? என்ன அது? என்ன நடந்தது? வித்தியாவதிக்கு ஆபத்து ஒன்றும் இல்லையே?" என்று ஆவலுடன் கேட்டான். கமலம்மாளும் "நம் இளவரசியைக் காணவில்லை" என் றாள் நடுநடுங்கிய குரலில். மன் னன் அதுகேட்டு "இளவரசி காண வில்லையா? எங்கே போனாள்?" எனக் கூறியவாறே "வித்தியா வதி! வித்தியாவதி!!" எனக் குரல் கொடுத்தவாறே அந்த மாளிகை யின் ஒவ்வொரு அறைக்குள்ளும் சென்று பார்த்தான். இளவரசி எங்கும் தென்படவில்லை.

கமலம்மாளோ "என்ன செய் வேன்! என் வாழ்நாளில் இப்படி நடந்து நான் பார்த்ததே இல்லை. ஏனோ நேற்றிரவு நான் மெய் மறந்து தூங்கி விட்டேன். கண் விழித்து எழுந்ததும் அரசகுமாரி யின் படுக்கை அறைக்குள் சென்று பார்த்தால் அவள் அங்கே இல்லை. வேறு எங்காவது போயிருக்கிறாளோ என நினைத்து எல்லா அறைகளி லும் போய்ப் பார்த்தேன். பூந் தோட்டத்தில் தேடினேன். அவள் எங்கும் தென்படவில்லை" என்று புலம்பலானாள்.

மன்னனும் ராணியும் அந்த மாளி கையில் தம் மகள் எங்கும் தென் படாதது கண்டு திகைத்துப் போயி னர். மன்னன் உடனே வெளிவந்து படகோட்டியிடம் "நீ போய் உடனே நம் சேனாதிபதியை அழைத்து வா" எனக்கூறி அவனை அனுப்பினான்.

(தொடரும்)






# ஏன் தென்பட்டது?

**த**ன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின்மீது ஏறி அங்கு தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! நீ எல்லா சாஸ்திரங்களையும் கற்றவன் போலத் தெரிகிறது. வெறும் புத்தகப் படிப்பு மட்டும் போதாது அனுபவ ஞானமும் ஒருவனுக்கு வேண்டும். அப்போதுதான் வாழ்க்கைச் சக்கரம் சுலபமாகச் சுழலும் இதனை விளக்க உனக்கு மெத்தப்படித்த ஒரு பண்டிதரையும் சாதாரண அறிவும் அனுபவ ஞானமும் கொண்ட ஒருவனையும் பற்றிய கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

வெகுகாலத்திற்கு முன் கமல

## வேதாளம் சொல்லும் கதை



புரத்தில் காசிநாதன் என்ற பணக்காரன் இருந்தான். அவனிடம் நிறையப் பணம் இருந்தும் அதுவே அவனைத் தொல்லைகளுக்கு ஆளாக்கியது. அவன் செய்த வியாபாரங்களில் எல்லாம் அவன் அமோக லாபம் அடைந்து வந்தது கண்டு மற்ற வியாபாரிகள் பொறாமை கொண்டார்கள். அவனது உறவினர்களோ அடிக்கடி அவனது வீட்டிற்கு வந்து ஏதோ ஒரு காரணத்தைக் கூறிக் கடன் கேட்கலானார்கள். அவனது மனைவியோ தனக்கு விலையுயர்ந்த நகைகள் வேண்டும் என்று கூறி அவற்றை வாங்கி வந்தாள். அவனது மகனோ பை நிறையப் பணத்தையும் போட்டுக் கொண்டு ஊர் சுற்றி பத்து நண்பர்களோடு சேர்ந்து திரிந்து உதவாக்கரையாக இருந்தான். அவனைத் திருத்த காசிநாதன் முயன்றும் முடியாது போயிற்று.

இக்காரணங்களால் காசிநாதனுக்கு நிம்மதி என்பதே இல்லாமல் போய்விட்டது. இந்நிலையில் அவன் பரமானந்தர் என்ற யோகியைக் கண்டான். அவரிடம் தன் பிரச்னையைக் கூறி தான் நிம்மதியுடன் வாழ வழி கூறுமாறு வேண்டினான். அவரும் "மகனே! இங்கிருந்து நூறு யோசனை தூரத்தில் விந்தியமலை அடிவாரத்தில் அம்பாசாகாரம் என்ற ஏரி உள்ளது. அந்த ஏரிக் கரையில் அம்பிகாதேவியின் ஆலயம் உள்ளது. நீ அம்பிகா தேவியை தரிசித்தால் உன் பிரச்னை தீரும். ஆனால் ஒரு விஷயம். அந்த தேவியின் விக்கிரகம் நல்ல அறிவாளிக்கு மட்டுமே தென்படும்" என்றார்.

காசிநாதனும் தான் போய் தேவியை தரிசித்து வருவதாகக் கூறி அவரிடம் விடைபெற்றுக் கொண்டு தன் வீட்டிற்கு வந்தான். ஒரு நல்ல நாளாகப் பார்த்து அவன் அம்பாசாகரத்திற்குக் கிளம்பினான்.

சில நாட்கள் பயணம் செய்த பின் அவன் வழியில் சதுராங்கதன் என்பவரைச் சந்தித்தான். சதுராங்கதன் தான் சகல சாஸ்திரங்களையும் கற்ற பண்டிதர் எனக் கூறினார். அதைக் கேட்டு காசிநாதன் வழியில் பேச்சுத்துணைக்கு நல்லதொரு பண்டிதர் கிடைத்தார் என்றும்

அவரிடமிருந்து பல புதிய விஷயங்களைத் தெரிந்து கொள்ளலாம் என எண்ணி மகிழ்ந்தான். அவன் அதிகம் கற்றவனல்ல. ஆனால் அறிவாளி எதையும் பிறரிடம் கேட்டு அறிந்து கொள்ளும் இயல்பு கொண்டவன் எனவே காசிநாதனும் தனக்கு ஏற்பட்ட பல சந்தேகங்களைக் கேட்க அவரும் அவற்றை போக்கி விளக்கமான பதில்களையும் கூறினார்.

காசிநாதன் அவற்றை கவனமாகக் கேட்டுக் கொண்டான். பிறகு அவன் "ஐயா! தங்களிடம் பேசப் பேச எனக்குப் பல புதிய விஷயங்கள் தெரிகின்றன. பல சிக்கலான விஷயங்கள் புரிகின்றன. தங்களுடன் இவ்வாறு பேசிக் கொண்டே வழிநடக்க எத்தனை காலத்திற்கு எனக்கு பாக்கியம் இருக்கிறதோ?" என்று கேட்டான்.

சதுராங்கதனும் "நான் விந்திய மலைப்பகுதிக்குப் போய்க் கொண்டிருக்கிறேன்" என்றார்.

காசிநாதன் அவரும் விந்திய மலைக்குத்தான் போகிறார் என அறிந்து மகிழ்ந்து "ஐயா! எனக்கு நல்ல பேச்சுத்துணை கிடைத்தது பற்றி மகிழ்கிறேன். நானும் விந்திய மலைப் பகுதிக்குத்தான் போகிறேன். அங்கே அம்பாசாகரம் என்ற ஏரி உள்ளது. ஏரிக்கரையில் உள்ள அம்பிகாதேவியை தரிசிக்கச் செல்கிறேன்" என்றான்.

அது கேட்டுச் சதுராங்கதன்



"நானும் அங்கேதான் அந்த விக்கிரகத்தைக் காணப்போகிறேன். உன் பிரச்னை என்ன?" எனக் கேட்கவே காசிநாதன் தான் பணத்தால் படும் அவஸ்தையைக் கூறி நிம்மதியை அடையவே அந்த தேவியை தரிசிக்கப் போவதாகக் கூறினான். அப்போது சதுராங்கதனும் "நானும் அந்த தேவியைத்தான் தரிசிக்கப் போய்க் கொண்டிருக்கிறேன்" என்றார்.

அதுகேட்டு காசிநாதன் ஆச்சரியப்பட்டு "நீங்கள் நிறையப் படித்தவராயிற்றே. நீங்கள் ஏன் தேவியை தரிசிக்கப் போக வேண்டும்?" என்று கேட்டான். சதுராங்கதனும் கவலையுடன் "என் தந்தை பெரிய பண்டிதர். நான் அவரிடம் எல்லா சாஸ்திரங்களையும் கற்றேன்.



அவற்றால் என்னால் குடும்பத்தின் பசியைப் போக்க மட்டுமே பணம் சம்பாதிக்க முடிந்தது. மற்ற என் விருப்பங்களை என் படிப்பால் நிறைவேற்றிக்கொள்ள முடியவில்லை. வசிக்க ஒரு சொந்த வீடு இல்லை. என் மனைவி விரும்பும் நகை, பாத்திரம் பண்டங்களை என்னால் வாங்கிக் கொடுக்க முடியவில்லை. என் குழந்தைகளுக்கும் அவர்கள் கேட்பனவற்றைக் கொண்டு வந்து கொடுக்க முடியவில்லை. இதனால் எனக்கு மன நிம்மதி இல்லாது போயிற்று. இந்த நிலையில் தான் அம்பிகா தேவியை தரிசித்தால் என் பிரச்னை தீரும் என்பது தெரிந்தது. எனவே இந்த தேவியை தரிசிக்கக் கிளம்பினேன்'' என்றார்.

எல்லாவற்றையும் கேட்டபின் காசிநாதன் "ஐயா! நான் இப்படியே திரும்பி விடுகிறேன். நான் தேவியை தரிசிக்க முடியாது என்று இப்போது தெரிந்துவிட்டது'' என்றான். சதுராங்கதனோ "இவ்வளவு தூரம் நீ வந்து தேவியை தரிசிக்க முயலாமல் போவது சரியல்ல. நீ தரிசிக்காவிட்டாலும் எனக்குத் துணையாகவாவது இரு. நான் தேவியை தரிசித்த பிறகு இருவரும் திரும்பிப் போகலாம்'' என்றான். காசிநாதனும் "நீங்கள் கூறுவதும் சரிதான். இவ்வளவு தூரம் வந்தாயிற்று. தேவியை தரிசிக்க முடியாது போனாலும் அந்தக் கோவிலையாவது பார்த்துத் திருப்தி அடைகிறேன். இவ்வளவு நாட்கள் உங்களோடு பழகி விட்டு உங்களுக்குத் துணையாக வரமாட்டேன் என்று கூறுவதும் சரியல்ல'' என்று கூறி சதுராங்கதனுடன் சென்றான்.

இருவரும் அம்பாசாகரத்தை அடைந்தனர். அங்கு தேவியின் ஆலயத்தைக் கண்டு பிடித்தார்கள். அந்தக் கோவிலின் முன்வாசலில் "தேவியின் விக்கிரகம் உண்மையான அறிவாளிக்கே தென்படும்'' என ஒரு கல்லில் செதுக்கப் பட்டிருந்ததை அவர்கள் கண்டார்கள்.

சதுராங்கதன் தான் ஏரியில் குளித்துவிட்டு கோவிலுக்குள் போய்

தேவியை தரிசித்து வருவதாகக் கூறிச் சென்றார். இதற்குள் காசி நாதன் ஏரிக்கரையிலிருந்த செடி களிலிருந்து மலர்களைப் பறித்து மாலை தொடுத்தான். சதுராங்க தன் கோவிலுக்குள் போய்விட்டு வந்து "நீ என்னமோ மாலையைக் கட்டி வைத்திருக்கிறாய். ஆனால் கோவிலில் தேவியின் விக்கிரகம் தென்படவில்லையே. கோவில் பாழடைந்து கிடக்கிறது. யாராவது அம்பிகாதேவியின் விக்கிரகத் தைக் கவர்ந்து சென்று விட்டார் களா?" என்று ஆச்சரியப்பட்ட வாறே கேட்டார்.



காசிநாதனோ தான் தொடுத்த மாலையுடன் கோவிலுக்குள் போனான். அப்போது சதுராங்கதன் "எனக்கே தெரியாத விக்கிரகம் உனக்கு எங்கே தெரியப் போகி றது?" என்று ஏளனமாகக் கூறி னான். காசிநாதனோ "அதோ பார் தேவி விக்கிரகம்! உன் போன்ற அறிவற்றவர்களுக்கு எப்படித் தென் படுவாள்?" எனக் கூறித் தன் கையி லிருந்த மாலையைத் தான் கண்ட விக்கிரகத்திற்கு அணிவித்தான்.

சதுராங்கதன் காசிநாதன் நின்ற இடத்தைப் பார்த்தபோது அவர் கண்களுக்கு விக்கிரகம் தென்பட வில்லை. ஆனால் காசிநாதன் போட்ட மாலை அந்தரத்தில் தொங் கிக் கொண்டிருந்தது கண்டு ஆச் சரியப்பட்டு மலைத்துப் போனார். மகாபண்டிதரான தனக்கு ஏன் விக்கிரகம் தென்படவில்லை என் பது அவருக்குப் புரியாத புதிரா கவே இருந்தது. காசிநாதனின் மனம் நிம்மதியை அடைந்தது. தன்பிரச்னைக்கு விடைகிடைத்து விட்டதாக அவன் உணர்ந்தான். சதுராங்கதனிடம் அவன் "இதுவரை நான் உமக்குத் துணைவந்தது போல என் ஊர் போகும் வரை எனக்குத் துணையாக நீர் வரவேண் டும்" எனக்கேட்டுக் கொண்டான். சதுராங்கதனும் அதற்கு இணங் கவே. இருவரும் அங்கிருந்து திரும் பிச் சென்றார்கள்.

காசிநாதன் சதுராங்கதனைத் தன் வீட்டிற்கு அழைத்துப் போய் "நீங்கள் சகல சாஸ்திரங்களையும்

கற்ற பண்டிதர். உங்களுக்கு நான் சமர்பிக்கும் காணிக்கை இது'' என்று கூறி ஒரு பை நிறையத் தங் கக் காசுகளையும் விலையுயர்ந்த நவரத்தினங்களையும் போட்டுக் கொடுத்தான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! நிம்மதியை அடைய அம்பிகா தேவியை தரிசிக்கச் சென்ற காசிநாதன் நடுவில் திடீரென ஏன் ஊர்திரும்ப எண்ணினான்? எல்லா சாஸ்திரங்களையும் கற்ற பண்டிதரான சதுராங் கதனை ஏன் அறிவற்றவன் எனக் கூறினான்? தேவியின் விக்கிரகம் பண்டிதரின் கண்களுக்குப் புலப் படாமல், காசிநாதனுக்கு மட்டும் தென்பட்டதற்கு என்ன காரணம்? இக்கேள்விகளுக்குச் சரியான விடை களை நீ தெரிந்திருந்தும் கூறாவிட் டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகிவிடும்'' என்றது.

விக்கிரமனும் ''காசிநாதன் தனக்கு நிம்மதி இல்லாது போவ தற்கு காரணம் தன் பணமே என நினைத்தான். ஆனால் மகாபண்டி தரான சதுராங்கதன் அதே பணத்தை நாடி தேவியை தரிசிக்க வந்தது கண்டு தான் நினைத்தது தவறு என உணர்ந்து அவன் உடனேயே திரும்பிவிட நினைத்தான். தன் பணத்தைப் பலருக்கும் கொடுப்ப தில் நிம்மதியைக் காணமுடியும் என்று அப்போது அவன் அறிந்து கொண்டான். இதை அறியாத சதுராங்கதனை அறிவற்றவன் எனக் கூறியது சரியே. இந்த சூட்சுமத்தை அறிந்தவனையே அறிவாளி எனக் கருதி காசிநாதனுக்கு தேவிதரிச னம் தந்தாள். அதை அறியாத பண்டிதரின் கண்களுக்கு அவள் புலப்படவில்லை'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவது மௌனம் கலை யவே அவள் சுமந்து வந்த உட லோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.





# புளுகு மணி

சிவபுரி மன்னனுக்கு ஒரு நாள் விசித்திர யோசனை தோன்றியது. யார் மிகப்பெரிய பொய்யைச் கூறுகிறானோ அவனுக்குப் புளுகு மணி என்ற பட்டம் அளித்து லட்சம் வராகன்கள் பரிசளிக்க அவன் தீர்மானித்தான். அதனால் அவன் தன் ஆஸ்தான விகடகவியை அழைத்துத் தான் நினைத்ததை அவனிடம் கூறினான்.

விகடகவியும் "சரியான யோசனை. இதற்கு ஒரு போட்டியை வரும் அமாவாசையன்று நம் அரண்மனைப் பூங்காவில் வைத்துப் புளுகு மணியைத் தேர்ந்தெடுக்கலாம்" என்றான். மன்னனும் "சரி. இந்தப் போட்டி நடப்பது பற்றி நாடெங்கிலும் பறை சாற்றி அறிவித்துவிடு" என்றான். விகடகவியும் அவ்வாறே செய்வதாகக் கூறிவிட்டுச் சென்றான்.

அமாவாசை வந்தது. மன்னன் போட்டியை நடத்த அரண்மனைப் பூங்காவிற்குச் சென்றான். அங்கு போட்டி நடக்கும் எவ்வித அறிகுறியும் இருக்கவில்லை. போட்டியில் கலந்து கொள்ள யாருமே வந்திருக்கவில்லை. அதைக்கண்ட மன்னன் பூங்காவின் காவலாளியிடம் "இங்கு இன்று ஒரு போட்டி நடக்கப் போகிறதே. அதில் பல பேர்கள் கலந்து கொள்வார்களே. அதற்கான ஏற்பாடுகளை யாரும் வந்து செய்யவில்லையா?" என்று கேட்டான்.

காவலாளியும் "போட்டி எதுவும் நடக்கப் போவதாக யாரும் என்னிடம் கூறவில்லையே" என்றான். அதைக் கேட்ட மன்னன் கோபம் கொண்டு காவலாளியிடம் "நீ போய் நம் ஆஸ்தான விகடகவியை அழைத்து வா"

—பரத் வெங்கட்—

என்றான். காவலாளியும் விகட கவியை அழைத்து வந்தான்.

மன்னன் விகடகவியிடம் "என்ன இது ? போட்டிக்கான அறிவிப்பு செய்யவில்லையா? யாருமே வர வில்லையே" என்று கோபத்தோடு கேட்டான். விகடகவியும் "போட் டியா? என்ன போட்டி? யார் நடத்துகிறார்கள்? எதற்கு? தாங் கள் என்ன சொல்கிறீர்கள் என்று எனக்குப் புரியவில்லையே" என்று கேட்டான்.

மன்னனும் "என்ன சொல்கிறாய் நீ? உன்னிடம் நான் மிகப்பெரிய பொய் கூறுபவனுக்கான போட்டி பற்றிக் கூறினேனே. நாடெங்கும் அதுபற்றிப் பறைசாற்றுவிக்கக் கட்டளை இட்டேனே. நீயும் அதைச் செய்வதாகக் கூறிச் சென்றாயே. ஏன் அதைச் செய்யவில்லை?" என்று கேட்டான்.

விகடகவியோ "நீங்கள் இப்படி என்னிடமா சொன்னீர்கள்? இல் லையே. நானும் தங்கள் கட்டளைப் படி பறைசாற்றுவிப்பதாகக் கூறி னேனா? இல்லையே. நீங்கள் சொல் வது மிகவும் விசித்திரமாக இருக் கிறது." என்றான். அது கேட்டு மன்னன் திகைத்துப் போனான்.

சற்று நேரம் யோசித்த பின் மன்னன் பலமாகச் சிரித்து "விகட கவி! சபாஷ் நீதான் 'புளுகு மணி' என்ற பட்டம் பெற தகுதி பெற்ற வன். எவ்வளவு பெரிய பொய்யை என்னிடம் கூறிவிட்டாய். என்னி டமே நீ நான் எதையும் சொல்ல வில்லை எனச் சாதிக்கிறாயே! இதைவிடப் பெரிய பொய் வேறு என்ன இருக்க முடியும்? நீதான் புளுகு மணி. உனக்கு அந்தப் பட்டத்தை அளிப்பதோடு லட்சம் வராகன்களையும் கொடுக்கிறேன் உன் சாமர்த்தியத்திற்கு இணையாக வேறு யாருடையதும் இல்லை" என்றான்.

விகடகவி அவற்றை ஏற்றதற்கு அறிகுறியாகப் புன்னகைப் புரிந்த வாறே நின்றான்.



# அம்புலிமாமா அனுபந்தம்—43




நம் நாட்டுப் பறவைகளும், மிருகங்களும்:

## குயில்

பறவைகளில் மிக இனிய குரல் படைத்தது குயில். குயிலைப் புகழாத இந்திய இலக்கியமே இல்லைதான். கவிஞர்களைக் கவிக்குயில் என்றும் இசை வல்லுநர்களை இசைக் குயில் என வர்ணிப்பதையும் கண்டு வருகிறோம். வசந்தகாலம் வந்ததும் குயிலின் இனிய கானத்தை அடர்ந்த தோப்புகளில் கேட்கலாம். ஆனால் குளிர்காலத்தில் குயில் வாய் மூடிக்கிடக்கும். எந்த இடம் கதகதப்பாக உள்ளது என அது தேடிக் கொண்டு போய்விடும்.

ஆண் குயில் நல்ல கருப்பாக இருக்கும். அதன் அலகு மஞ்சள். இலைப்பச்சை நிறத்தில் இருக்கும். கண்ணைச் சுற்றி சிவப்பு நிறக் கோடு இருக்கும். பெண் குயில் அவ்வளவு கருப்பாக இராது. அதன் உடலில் வெள்ளைக்கோடுகளும் சிறு புள்ளிகளும் இருக்கும். குயில் கூடு கட்டாது. அதனால் பெண் குயில் தான் இடும் முட்டைகளைக் காக்கையின் கூட்டில் இடும். அதன் முட்டைகள் காக்கையின் முட்டைகளைப் போல இருப்பதால் காக்கை அவற்றைத் தன் முட்டை என நினைத்து அடைகாத்துக் குஞ்சு பொரிக்கும். அக்குஞ்சுகளுக்கு காக்கை உணவும் ஊட்டும்.

குயில் இலைகள் அடர்ந்துள்ள மரங்களில் வசிக்கும். அதற்குப் பழங்கள், புழுக்கள் போன்றவைதான் ஆகாரம்.

# பாலகவி 'வர்த்தமானன்'

மேலை நாடுகளில் புத்தகப் பிரியர்கள் அவற்றின் ஆசிரியர்களிடம் அவரது நூல்களில் அவரது கையெழுத்து வாங்குவதில் மிக்க ஆர்வம் கொண்டவர்கள். அங்கு நூலாசிரியர்கள் மற்ற துறைப் பிரமுகர்களைப் போலப் புகழ் பெற்றவர்களே. நம்நாட்டில் இப்படிப்பட்ட நிலை இல்லை. ஒரு சில சமயம் நூலாசிரியர்களிடம் அவர்களது புத்தகங்களில் கையெழுத்து வாங்குவோர் நம் நாட்டிலும் இருப்பதைக் காணலாம்.

இம்மாதிரி கையெழுத்து வாங்க பாலகவி வர்த்தமானன் எனப்படும். ஆதித்த தாமோதரன் என்ற பதினொரு வயதுச் சிறுவனை பிப்ரவரி மாதம் புதுடில்லியில் நடந்த உலகப் புத்தகக் கண்காட்சியில் பலர் முற்றுகை இட்டார்கள்!



அதில் புகழ்பெற்ற வெளியீட்டகத்தினரின் ஸ்டாலில் அமர்ந்து ஆதித்தன் தனது 'கவிதை தொகுப்பு' என்ற புத்தகத்தின் பிரதிகளில் கையெழுத்துப் போட்டுப் பலருக்கும் கொடுத்தது யாவரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. இதற்கு முன் இவனது 'வைப்ரேஷன்ஸ்' என்ற ஆங்கில கவிதை நூல் மிகுந்த பாராட்டைப் பெற்றது. அதைப் படித்த பலர் பாலகவியிடம் கையெழுத்து வாங்க வரிசையாக நின்றனர்! இவர்களில் பலர் இளம் கவிஞர்கள்.

ஆதித்தன் தனது எட்டாவது வயதிலேயே ஒரு கவிதை புனைந்தான். இதுவே அவனது முதல் கவிதை. இதற்குப்பின் அவ்வப்போது கவிதைகள் எழுதலானான். ஆதித்தனின் தந்தை வங்காளம், அஸ்ஸாம் ஆகிய மாநிலங்களில் உயர் அதிகாரியாகப் பணிபுரிந்து வந்தார். அப்போது ஆதித்தன் தன் தந்தையின் அறையிலுள்ள புத்தகங்களை எல்லாம் படித்து வந்தான். அவன் பெரிதும் விரும்பியவை கவிதைகளே. கவிதையின் சந்தம், பொருள் இவற்றையெல்லாம் கூர்ந்து கவனித்து வந்தான்.

இயற்கை அழகு பொருந்திய அம்மாநிலங்களிலிருந்து மாற்றலாகி ஆதித்தனின் தந்தை புதுடில்லிக்கு வந்தார். ஆதித்தன் டில்லியின் சுற்றுப் புறச் சூழ்நிலை, மக்களின் வறுமை கண்டு மிகவும் வருந்தினான். இவையே அவனது கவிதைகளின் மையப் பொருள்களாகின. ஆதித்தன் மற்ற மாணவர்களைப் போலப் பள்ளியிலிருந்து வீட்டிற்கு வந்ததும் தன் வீட்டு வேலைகளைச் செய்து விட்டு விளையாடச் செல்வான். கால் பந்தாட்டாம் இவனுக்கு மிகவும் பிடிக்கும். 'செஸ்' விளையாடுவதில் புலி. மாலையில் தன் பாடங்களைப் படித்து விட்டு இரவில் தன் அறையில் அமர்ந்து கவிதை பற்றி யோசிப்பான்.

இவனுக்குக் கம்ப்யூட்டர் இன்ஜினியர் ஆக வேண்டும் என மிகவும் ஆசை. பாலகவி வர்த்தமானன் மேலும் பல கவிதைகளை அளிப்பான் என நாம் உறுதியாக நம்பலாம்.

# உங்களுக்குத் தெரியுமா?

1. தங்கம், வைரம் போன்றவற்றைக் குறிக்கும் எடையின் பெயர் என்ன?
2. மிக ஒளியுள்ள நட்சத்திரம் எது?
3. உலகில் முதன் முதலில் பேபர் பேக் புத்தகத்தை வெளியிட்டவர்யார்?
4. 'ஆஸ்கார்' விருதிற்கு அப்பெயர் ஏன் வந்தது?
5. 25 ஆண்டுகள் நிறைந்தால் வெள்ளிவிழா. அது போல் 'பேபர் அனிவர்சரி' என்றால் என்ன?
6. சக ஆண்டின் முதலாவது மாதம் எது?
7. 1921-க்கு முன் டேபிள் டென்னிஸின் பெயர் என்ன?
8. பிறந்த நாளிலே சிரித்தார் என ஒரு பாரசீக ஞானியைப் பற்றிக் கூறுவர். அவர்யார்?
9. ரத்தத்தை நான்கு பிரிவுகளாகப் பிரித்துள்ளனர். ஏ,பி,ஓ எனப்படுபவை மூன்று. நான்காவது பிரிவு எது?
10. ஒரே சமயத்தில் மூன்று நாடுகளின் அதிபராக இருந்தவர் யார்?
11. வரிக்குதிரையின் சிறப்பு என்ன?
12. எவ்வளவு சந்திரன்களுக்கு சனிக்கிரகம் உள்ளது?
13. பூமியிலிருந்து சற்று உயரப் போய் ஆகாயத்தைப் பார்க்கும் போது அதன் நிறம் என்ன?
14. ஆக்ராவை யார், எப்போது நிறுவினார்?
15. மண்ணுணி பாம்பிற்குக் கண்ணும் காதும் உண்டா?

## விடைகள்

1. காரட்.
2. கேட்டை.
3. பாஸ்டஸ் பில்ப் ரிக்லேம், 1867-ல்.
4. அமெரிக்காவில் 1929-ல் முதன் முதலாக இந்த விருது அளிக்கப்பட்ட போது ஏதோ ஒரு மனிதனின் உருவை இதில் புகுத்தினார்கள். திரைப்பட அகாடமி அதிகாரி இதைக் கண்டு வியந்து அது தன் மாமா ஆஸ்கார் போல இருப்பதாகக் கூறினார். அது முதல் அப்பெயர் வழங்கலாயிற்று.
5. முதலாவது ஆண்டு விழா.
6. சைத்திரம்.
7. பிங்-பாங்.
8. ஜோராஸ்டர்.
9. ஏபி.
10. சைமன் பொலிவியர் 1923-ல் அவர் பொலிவியா, பெரு, கொலம்பியர் ஆகிய மூன்று நாடுகளில் அதிபராக இருந்தார்.
11. எந்த இரு வரிக் குதிரைகளின் உடல் கோடுகள் ஒன்று போல இராது.
12. பத்து.
13. கருப்பு.
14. சிகந்தர் லோடி. 1508-ல்.
15. இல்லை.

# அம்புலிமாமா செய்திகள்

## உயரமான பாலம்!

உலகில் வாகனங்கள் செல்லக் கூடிய மிக உயரமான பாலம் நம் நாட்டில் காஷ்மீரில் லடாக் பகுதியில் பர்டங்லா என்ற இடத்தில் உள்ளது என இந்திய எல்லைப்புறப் பாதை நிறுவனம் பெருமையாகக் கூறுகிறது. இந்தப் பாலம் கடல் மட்டத்திலிருந்து 18,593 அடி உயரத்தில் உள்ளது. இதை உருவாக்கி அமைத்த தலைமைப் பொறியாளர் பிரிக். வாம்பட் கேராவின் பெயர் 'கின்னெஸ்' புத்தகத்தில் இடம் பெற்றுள்ளது.





## ஐம்பது லட்ச மதிப்பு மரம்

மெக்ஸிகோவில் ஒக்சாகா மாநிலத்தில் ஹாடே என்ற ஒருவகைப்பட்ட மரம் பல சுற்றுலாப் பயணிகளின் கவனத்தைக் கவர்ந்துள்ளது. அது 2000 ஆண்டுகளாக இருந்து வருவதாகக் கூறுகிறார்கள். இந்த மரத்தைப் பாதுகாக்க ஐம்பது லட்சம் டாலர்கள் செலவிட அரசாங்கம் தீர்மானித்துள்ளதாம்!

## கண்ணுக்குக் குளிர்ச்சி

சரியான பார்வை இல்லாத குழந்தைகளுக்கு இளம் மஞ்சள் நிற மூக்குக் கண்ணாடிகளை அணிவித்தால் பார்வை சரியாகிவிடும் என்று அண்மையில் தெரிய வந்துள்ளது. ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழக நரம்பியல் நிபுணர் டாக்டர் ஜான் ஸ்டெஸ் சாதாரணக் கண்ணாடிகளையும், இளம் மஞ்சள் நிறக் கண்ணாடிகளையும் கொண்டு 20 குழந்தைகளைப் பரிசோதித்தார். அதில் தான் இளம் மஞ்சள் நிறக்கண்ணாடி பார்வையை சரியாக்குகிறது என அவர் கண்டார்.






# சோதிடராகாதே!

நாராயணன் தன் தந்தையான கோவிந்த பட்டரிடம் எல்லா சாஸ் திரங்களையும் கற்றுக் கொண்டான். கோவிந்தன் தன் மகன் கவிஞனா யும் பண்டிதராயும் பெயர் பெற வேண்டும் என விரும்பினார். நாரா யணனோ தான் கற்ற சோதிட சாஸ்திரத்தைக் கொண்டு சோதிடம் கூறிப் பணம் சம்பாதித்து வாழ விரும்பினான். அவன் ஆரம்பத்தில் ஓரிருவருக்குச் சொன்ன ஜோசிய மும் பலிக்கவே அவன் அத்தொழி லையே நடத்திவரத் தீர்மானித் தான்.

அப்போது கோவிந்த பட்டர் "நாராயணா! சோதிடம் என்பது நம்பிக்கையின் அடிப்படையில் அமைவது. நடக்கப் போவது என்ன என்று பிரம்ம தேவனால் கூட முன்கூட்டிச் சொல்ல முடியாது. அதனால் நீ சோதிடத்தைத் தொழி லாகக் கொள்ளாதே. கவிதைகள், காவியங்கள் புனைந்து மர்பெரும் பண்டிதர் எனப் பெயர் பெற முயற்சி செய். யாராவது வந்து சோதிடம் கூறச் சொன்னால் அவர் கொடுப்பதை வாங்கிக்கொள்" என்றார்.

நாராயணனோ தன் தந்தை கூறியதை ஏற்கவில்லை. அவனது அதிர்ஷ்டம் அவன் கூறிய ஜோசியம் எல்லாம் பலித்தே வந்தது. ஒரு முறை அவ்வூரில் நான்கு பேர்களின் ஞாதகத்தைப் பார்த்து விட்டு அவர்களுக்குப் புதையல் கிடைக் கப் போவதாகக் கூறினான். அவர் களுக்கும் புதையல் கிடைத்தது. அதனால் அவன் பெயர் சுற்றுப் பக்கத்து ஊர்களிலும் பரவலா யிற்று.

ஒருநாள் நாராயணனிடம் சோதி டம் கேட்க வீரப்பன் என்றும்

—சிவனார் செல்வன்—

பாலய்யன் என்றும் இரண்டு முரடர்கள் வந்தார்கள். அவர்களை கோவிந்த பட்டர் நன்கு அறிவார். அதனால் தன் மகனிடம் "நாராயணா! ஜாக்கிரதை. இவர்களுக்கு ஏதாவது சொல்லி ஜோசியம் கூறாமல் தட்டிக் கழித்து விடு. நீ ஏதாவது கூறி அது மட்டும் நடக்காது போனால் இவர்கள் உன்னைக் கொன்றே விடுவார்கள்" என்றார்.

நாராயணன் தன் தந்தை கூறியதை லட்சியம் செய்யாமல் அவர்களது ஜாதகங்களைப் பார்த்து விட்டு "உங்கள் வீட்டுக் கொல்லைகளில் பாம்புப் புற்றுகள் உள்ளன. அவற்றைத் தகர்த்தால் உங்களுக்கு நன்மை ஏற்படும்" என்று கூறி அனுப்பினான்.

இதற்குப் பத்து நாட்களுக்குப் பின் கோவிந்த பட்டர் வெளியூர் போய் விட்டுத் தன் ஊருக்குத் திரும்பி வந்தார். அவர் தம் மகனிடம் "நாராயணா! நான் வீரப்பனையும் பாலய்யனையும் பட்டணத்தில் பார்த்தேன். நீ கூறியபடி அவர்கள் தம் வீட்டுக் கொல்லைகளில் உள்ள பாம்புப் புற்றுகளை உடைத்தார்களாம். ஒரு புற்று இருந்த இடத்தில் ஒருவருக்குப் பத்து லட்சம் பவுன்கள் கொண்ட புதையல் கிடைத்ததாம். அவர் உனக்குப் பத்தாயிரம் பவுன்கள் கொடுத்து மரியாதை செய்யப் போவதாகக் கூறினார். மற்றவர் தன் வீட்டின் பின்புறம் இருந்த பாம்புப் புற்றை உடைத்த போது அதிலிருந்து நான்கு நாகப் பாம்பு



கள் வந்து அவரது குடும்பத்தினரை எல்லாம் கடித்து விட்டன. அவர்கள் எல்லோரும் இறந்தார்கள். அவர் மட்டும் உயிர் தப்பினார். அவர் உன் தலையைச் சீவி எறியப் போவதாகக் கூறினார். அவர் இங்கு வருவதற்குள் நாம் இந்த ஊரை விட்டே போய்விடலாம்'' என்றார்.

நாராயணனோ ''வேண்டாம். என் ஜோசியம் பலித்தது. நான் முதலில் பத்தாயிரம் பவுன்களை வாங்கி வருகிறேன். அவர்களில் யாருக்குப் பத்த லட்சப் புதையல் கிடைத்தது?'' என்று கேட்டான்.

கோவிந்த பட்டரும் ''அது தானே எனக்குச் சரியாக ஞாபகம் இல்லை. இருவரும் ஒரே சமயத்தில் பேசியதால் யார் வீட்டில் புதையல் இருந்தது, யார் வீட்டில் பாம்புகள் இருந்தன என்பது தெரியவில்லை. நீதான் ஒருவரிடமிருந்து பணம் பெறப்போவதாகக் கூறினாயே. உன் ஜாதகத்தைப் பார்த்து யார் உனக்குப் பணம் கொடுப்பவர் என்று கண்டு பிடிக்கலாமே'' என்றார்.

நாராயணனும் ''ஆகா! சரியாகச் சொன்னீர்கள். இப்போதே கணக்குப் போட்டுப் பார்த்துக் கண்டுபிடிக்கிறேன்'' எனக்கூறித் தன் ஜாதகத்தை எடுத்து வைத்தக் கொண்டான். வெகுநேரம் ஏதேதோ கணக்குப் போட்டுப் பார்த்துக் பார்த்தான். ஆனால் யாரிடமிருந்து தனக்குப் பத்தாயிரம் பவுன்கள் கிடைக்கப் போகிறது என்பதை அவனால் கண்டுபிடிக்க முடியவில்லை.



முடிவில் அவன் தன் தந்தை யிடம் "என் ஜாதகத்திலிருந்து யாரிடமிருந்து எனக்குப் பணம் கிடைக்கப் போகிறது என்பதைக் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆனால் நான் இந்த ஊரை விட்டுப் போகவும் மாட்டேன். எனக்குக் கொடுப்பதாக அறிவிக்கப் பட்ட பத்தாயிரம் பவுன்களையும் எப்படியும் வாங்கிவிட வேண்டும் என்ற ஆசையும் இல்லை. எப்போதும் போல இதே ஊரில் இருந்து கொண்டு ஜோசியம் கூறியே வாழப் போகிறேன்" என்றான்.

அப்போது கோவிந்த பட்டர் சிரித்துக் கொண்டே "நீ இந்த ஜோசியம் சொல்லியே வாழ்வது என்பதை மறந்து விடு. ஏனென்றால் பிறருக்கு நீ ஜோசியம் சொல்லி அது தவறுதல் என்றாகி விட்டால் அதுபற்றி நீ கவலைப்படமாட்டாய். ஏனென்றால் ஜோதிட சாஸ்திரத்தைக் கரைத்துக் குடித்து விட்டதாக எண்ணி நீ சொல்வது எல்லாம் அப்படியே நடக்கும் என்றும் நினைக்கிறாய். வீரப்பனுக்கும் பாலய்யனுக்கும் நீ கூறிய ஜோசியத்தில் ஒருவனுக்கு அது பொய்த்து போயிற்று என்று நீ அறிந்தும் அது பற்றிக் கவலைப்படவில்லை. உன் உயிருக்கே ஆபத்து என்றபோதும் நீ உன் ஜாதகத்தைப் பார்க்க வில்லை. உனக்கு ஆதாயம் கிடைக்கலாம் என்றதும் நீ உன் ஜாதகத்தைப் பார்த்தாய். நான் உண்மையில் அவர்களைச் சந்தித்தேனா என்பதைக்கூட உன்னால் உன் ஜோசியத்தால் அறிய முடியவில்லை. இன்னமும் நீ உன் ஜோசியத்தை நம்புகிறாய். நீ இந்தத் தொழிலை விட்டு கவிதைகள் எழுது. காவியங்கள் புனை. உனக்குப் பேரும் புகழும் பொருளும் தானே வந்து சேரும்" என்றார்.

நாராயணனின் கண்கள் திறந்தன. அவன் தன் தந்தை சொன்னதை ஏற்று இலக்கிய உலகில் பேரும் புகழும் பெற்றான்.






# கரையே இல்லை!

வெகு நாட்களுக்கு முன் உஜ்ஜயினி நகரில் வித்தியாபூஷணர் என்ற மாபெரும் பண்டிதர் இருந்தார். அவர் படிக்காத சாஸ்திரம் இல்லை என்றும் அவருக்குத் தெரியாதது எதுவும் இல்லை என்றும் மக்கள் கூறிவந்தார்கள்.

வித்தியாபூஷணரின் இரு சீடர்களான சேகருக்கும் நந்துவிற்கும் தம் குரு மாபெரும் மேதையாக விளங்குகிறாரா என்ற ஐயம் அவ்வப்போது ஏற்பட்டது. சேகர் நந்துவிடம் "நம் குரு கல்வி கற்றது ஞானேந்திரரிடம். அந்த மகானின் சீடனாக எவ்வளவு சிரமப்பட வேண்டும் தெரியுமா? அந்த குருவின் மகிமையால் தான் நம் குரு இவ்வளவு கற்றிருக்கிறார்" என்றான்.

நந்துவோ "எனக்கென்னவோ ஞானேந்திரர் அஸ்திவாரம் மட்டும் போட்டுக் கொடுத்திருப்பார் என்றே தோன்றுகிறது. கட்டடம் போல அதன் அடிப்படையில் நம் குரு தம் அறிவை விரிவாக்கிக் கொண்டிருக்கிறார். எனவே நம் குருவின் கடின உழைப்புதான் அவர் மாபெரும் பண்டிதர் எனப் பெயர்பெறக் காரணம்" என்றான்.

இரு சீடர்களும் தம் சந்தேகத்தைத் தம் குருவிடமே கேட்டு விடை பெறுவது என்று தீர்மானித்துக் கொண்டு வித்தியாபூஷணரிடம் சென்றார்கள். அவரும் தம் சீடர்கள் சொன்னதைக் கேட்டு "உங்களுக்கு இப்படி ஒரு சந்தேகம் ஏற்பட்டது என் நல்ல காலமே. ஏனெனில் நான் பல வேதாந்த விஷயங்களுக்குச் சரியான விடைகள் தெரியாமல் தத்தளித்துக் கொண்டிருக்கிறேன். அவற்றைப் போக்கக் கூடிய ஒரே அறிஞர் என் குருவான ஞானேந்திரரே. அவர் தற்போது மிகவும்

—பாலாஜி கிருஷ்ணன்—



இக்கேள்விகளுக்கு உடனடியாக பதில் சொல்ல முடியவில்லை. இரண்டு நாட்கள் கழித்து இவற்றிற்கு விடை கூறுகிறேன். அவ்விடைகளை யோசித்துக் கூறுவதால் என் அறிவும் பெருகும்'' என்றார்.

ஞானேந்திரர் கூறியபடி சேகரும் நந்துவும் இரண்டு நாட்களுக்குப் பின் ஞானேந்திரரிடம் சென்றார்கள். அவர் தாம் கூறும் விடைகளை எழுதிக் கொள்ளுமாறு கூறவே இருவரும் அவற்றை எழுதிக் கொண்டார்கள்.

அதன் பிறகு அவர் ''நீங்கள் வித்தியாபூஷணனின் சீடர்கள். உங்களுக்கு அதிகமாக நான் சொல்ல வேண்டியதும் இல்லை. நான் அளித்த இந்த விடைகள் மானிட தர்ம சாஸ்திரத்தில் உள்ளன. ஆனால் இந்த விடைகளிலிருந்து வேறு பல புதிய கேள்விகள் பிறக்கும். அவை வேதியல் தொடர்பு கொண்டவை. அவற்றிற்கான விடைகளை அவந்தி நகரில் வாழும் குணசீலன் என்ற குயவனிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள். அந்த விடைகளையும் என் விடைகளையும் சேர்த்து உங்கள் குருவிடம் கொடுத்தாலே அவர் கேட்ட கேள்விகளுக்கு முழுமையான விடை கிடைக்கும்'' என்றார்.

சீடர்கள் இருவரும் ஞானேந்திரரிடம் விடைபெற்றுக் கொண்டு காசியிலிருந்து கிளம்பி அவந்தி

வயதாகி நோயுற்று இருக்கிறார். நான் என் கேள்விகளை எழுதிக் கொடுக்கிறேன். அவற்றை அவரிடம் கேட்டு அவர் கூறும் பதிலை பெற்று வாருங்கள்'' எனக்கூறி தம் கேள்விகளை எழுதி அவர்களிடம் கொடுத்து அனுப்பினார்.

இரு சீடர்களும் ஞானேந்திரர் வசிக்கும் காசிக்குக் கிளம்பிச் சென்றார்கள். அவர்கள் ஞானேந்திரரைக் கண்டு வித்தியாபூஷணர் எழுதிக் கொடுத்த கேள்விகளை அவரிடம் கொடுத்தார்கள். ஞானேந்திரரும் அவற்றைப் படித்துவிட்டுப் புன்னகை புரிந்து ''வித்தியாபூஷணன் இத்தகைய சிக்கலான கேள்விகள் கேட்டதால் நான் பூரிப்பு அடைகிறேன். முதுமை காரணத்தால்

நகரை அடைந்தார்கள். அவர்கள் குணசீலனைக் கண்டு ஞானேந்திரர் கூறியதைச் சொன்னார்கள். குண சீலனும் மிக்க மகிழ்ச்சி அடைந்த வனாய் "குரு மகராஜ் நலமா? நான் சிறுவனாக இருக்கும்போது அவர் தம் சீடர்களுக்குப் பாடம் கற்பிக்கையில் திண்ணை ஓரமாக நின்று கேட்டு வந்தேன். இதை கவனித்த அவர் ஒருநாள் என்னைத் தம் அருகே அழைத்து "குணசீலா! நீ கல்வியில் காட்டும் ஆர்வத்தைப் பாராட்டுகிறேன். நீ உன் பரம்பரைத் தொழிலில் சிறந்து விளங்குவது இந்த ஊர் முழுவதும் தெரிந்ததே. கல்வி என்பது கரை காண முடியாத கடல். அதனால் என்றாவது ஒருநாள் என் சந்தேகங்களைத் தீர்த்துக் கொள்ள உன்னை நாட வேண்டி வரும். அது என் மாபெரும் பாக்கியம் என்றே கருதுவேன்" என்றார். அதன் பிறகு இங்கு எனக்கு அரசாங்க உத்தியோகம் கிடைக்கவே நான் காசியிலிருந்து இங்கு வந்தேன்" எனக்கூறி அவர்கள் கேட்ட கேள்விகளுக்கு விடைகளை எழுதிக் கொடுத்தான்.

சீடர்களும் அவற்றைப் பெற்றுக் கொண்டு உஜ்ஜயினிக்குக் கிளம்பவே அவர்களிடம் குணசீலன் "நான் அளித்துள்ள இந்த விடைகள் நான் கற்ற படிப்போடும் என் பரம்பரைத் தொழிலில் கிடைத்த அனுபவத்தோடும்தான். இவை



சரியானவையோ அல்லது தவறானவையோ என்று என்னால் அறுதியிட்டுக் கூறமுடியவில்லை. வேதியலில் இதற்கான விடைகள் உள்ளன என்று பலரும் கூறக் கேட்டிருக்கிறேன். ஆனாலும் என் இளமைப் பருவ நண்பனான வித்தியாபூஷணன் என் குரு மகராஜாவின் பிரதம சீடன். அவன் இப்போது மாபெரும் மேதை எனக் கேள்விப்படுகிறேன். அவன் இப்போது உஜ்ஜயினியில் தான் இருக்கிறான். என் விடைகளை அவனிடம் காட்டி இவை சரிதானா என்று தெரிந்து கொள்ளுங்கள். அவனை நான் மிகவும் விசாரித்ததாகவும் சொல்லுங்கள்" என்றான்.

அதுகேட்டு சேகரும் நந்துவும்

"நாங்கள் அந்த வித்தியாபூஷண ரின் சீடர்களே. அவர்தாம் முதலில் தம் கேள்வியை அவர் குருவான ஞானேந்திரரிடம் கேட்டு பதில் பெற்று வரச் சொன்னார். ஞானேந் திரர் அவற்றிற்கான பதில்களைக் கூறி அந்தப் பதில்களிலிருந்து எழுந்த புதிய கேள்விகளை உங் களிடம் கேட்கச் சொன்னார். தங் களது விடைகளோடு ஞானேந்தி ரரின் விடைகளையும் சேர்த்து அவரிடம் கொடுக்கிறோம்" எனக் கூறி விடைபெற்றுக் கொண்டு உஜ்ஜயினிக்குச் சென்றார்கள்.

சீடர்கள் இருவரும் உஜ்ஜயினி யில் தம் குருவைக் கண்டு அவர் கேட்ட கேள்விகளின் விடைகளைக் கொடுத்து நடந்ததை எல்லாம் கூறினார்கள். வித்தியாபூஷணரும் புன்னகை புரிந்து "எல்லோரும் என்னை மாபெரும் மேதை என்று புகழக் கேட்டீர்களா? ஆனால் எனக்கே தெரியாத விஷயங்கள் பல உள்ளன என்பதை இப்போது நீங்களே கண்டு கொண்டீர்கள். அறிவைப் பெருக்கிக் கொள்ள பல நூல்களும், குருவின் போதனை களும் உதவுகின்றன என்பதில் சந் தேகமே இல்லை! ஆனால் நமக் குத் தெரிந்ததைவிட தெரியாதவையே எவ்வளவோ உள்ளன. இதை ஒருவன் உணர்ந்து கேள்வி மேல் கேள்வியாகக் கேட்டு சரியான விடைகளைத் தெரிந்து கொண்டு தன் அறிவை வளர்த்துக் கொள்ள வேண்டும். இப்படிச் செய்வதற்கு முடிவு இராது. ஆனால் இவ்வாறு செய்து கொண்டிருப்பவனே மா பெரும் மேதையாக விளங்குவான்" என்றார்.

வித்தியாபூஷணர் கூறியதில் மகத்தான உண்மை உள்ளது என சேகரும் நந்துவும் தெரிந்து கொண் டார்கள். அவர்களும் தம் குரு காட்டிய வழியிலேயே சென்று தம் அறிவைப் பெருக்கிக் கொண்டு மாபெரும் பண்டிதர்கள் என்று பெயர் பெற்றார்கள்.






மூர்ச்சையுற்று விழுந்து கிடக்கும் இராமரையும் இலட்சுமணனையும் காண விபீஷணன் விரைந்து வந்தான். அவர்களது நிலை கண்டு அவன் மனம் மிகவும் வாட்டமுற்றது. இனி தான் இலங்கையின் மன்னனாகப் போவது என்பது நடக்கப் போவதில்லை என்று அவன் எண்ணினான்.

அப்போது சுக்கிரீவன் அவனிடம் "விபீஷணா! இவர்கள் இறந்துவிடவில்லை. தம் நினைவை இழந்து மயக்கமுற்று விழுந்து கிடக்கிறார்கள். இராவணனும் இந்திரஜித்தும் இவர்களை வீழ்த்தி வெற்றி பெற்றுவிடவில்லை. இவர்களது இந்த மயக்கம் தெளிந்து எழுந்ததும் இராவணனைக் கொன்று இலங்கைக்கு உன்னை மன்னனாக்கத்தான் போகிறார்கள். இப்போது நாம் இவர்களது மயக்கம் தெளிய வழிகாண வேண்டும்" என்றான்.

பிறகு சுக்கிரீவன் தன் மாமனான சுஷேணனை நோக்கி "மாமா! எப்படி இவர்களது மயக்கத்தைப் போக்குவது? உமக்கு ஏதாவது வழி தெரிகிறதா? என்று கேட்டான். சுஷேணனும் "முன்பு ஒருமுறை தேவர்களுக்கும் அசுரர்களுக்குமிடையே போர் மூண்டதை நான் அறிவேன். அப்போரிலும் ராட்சஸர்கள் இதுபோல மாயப்போரைப் புரிந்து பல தேவர்களை அடித்து வீழ்த்தினார்கள். சில தேவர்கள் மயக்கமுற்றுக் கிடந்தார்கள். வேறு சிலர் இறந்தும் போனார்கள்.

—கருடனின் உதவி—



அப்போது தேவர்களின் குருவான பிரகஸ்பதி மிருத சஞ்சீவினி மந்திரத்தாலும் மூலிகைகளாலும் அவர்களை உயிர்ப்பித்தார். இமயமலையில் உயரக் குன்றுகளில் உள்ள அவற்றைக் கொண்டுவர அனுமாரை நீ அனுப்பு'' என்றான்.

அப்போது பலத்த காற்று வீசியது. அதற்குக் காரணம் என்ன என்று வானரர்கள் பார்த்தபோது ஆகாயவழியே கருடபிரான் வருவதை கண்டார்கள். கருடனைக் கண்டதுமே இராமரையும் இலட்சுமணனையும் கட்டிய நாகபாசங்கள் விடுபட்டுப் பாம்புகளாகி ஓடிப்போயின.

கருடன் இராமரையும் இலட்சுமணனையும் அணுகி அவர்களது முகத்திலும் உடல்மீதும் தன் இறக்கைகளால் விசிறித் தடவினான். மறு நிமிடமே அவர்கள் தூங்கி எழுந்தவர்கள்போல எழுந்து வந்தார்கள்.

இராமர் கருடனைப் பார்த்து "உம் தயவால் நாங்கள் எப்போதும் இருப்பது போலாகி விட்டோம். உங்களைப் பார்த்தால் மதிப்பிற்குரிய எம் முன்னோர்களைப் பார்ப்பது போல இருக்கிறது. உங்களது திவ்விய ஆடை ஆபரணங்களைக் கண்டு ஆச்சரியமும் ஆனந்தமும் அடைகிறேன். தாங்கள் யார் என்று நான் அறிந்து கொள்ளலாமோ?'' என்று கேட்டார்.

கருடனும் பரவசப்பட்டவனாய் "இராமரே! நான் உமது நண்பனே. என் பெயர் கருடன். உங்கள் இருவருக்கும் உதவி புரியவே வந்தேன். உங்களைப் பிணைத்திருந்த நாகபாசங்கள் உண்மையில் பாம்புகளே. இவற்றை நீக்கிவிட யாராலும் முடியாது. உங்கள் நிலையை அறிந்ததும் அந்தப் பாம்புகளை விரட்டவே நான் வந்தேன். இந்தப் போரின்போது நீங்கள் மிகவும் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். ராட்சஸர்கள் மாயப்போர் புரிபவர்கள். இவர்களை நம்பக்கூடாது. எப்போது என்ன செய்வார்கள் என்பதை விழிப்புடன் கவனிக்க வேண்டும்'' என்றான்.

அதைக்கேட்டு இராமர் ஆச்சரியத்துடன் அவனை மேலும் கீழும்

பார்த்தார். கருடனும் "நான் இப்போது விடைபெற்றுக் கொள்கிறேன். நான் எப்படி உங்களது நண்பன் என்பது பற்றிப் பிறகு கூறுகிறேன்." என்று கூறிவிட்டு ஆகாய வழியே பறந்து சென்றான்.

இராமரும் இலட்சுமணனும் எப்போதும் போலாகி எழுந்து வந்தது கண்டு வானரர்கள் தம் வால்களை ஆட்டி மகிழ்ச்சி ஆரவாரம் செய்தார்கள். பேரிகைகள் முழங்கின. வானரர்கள் மரங்களைப் பிடுங்கி இலங்கைக் கோட்டையை பலத்த ஆரவாரத்தோடு தாக்கலானார்கள்.

திடீரென வானரர்களுக்கு உற்சாகம் ஏற்பட்டு ஏன் இப்படி ஆரவாரம் செய்கிறார்கள் என்று இராவணன் ஆச்சரியப்பட்டான். அவன் தன் அமைச்சர்களிடம் "இந்த வானரர்கள் ஏன் இப்படிக் கூத்தாடுகிறார்கள்? இராமனும் இலட்சுமணனும் இறந்துதான் போனார்களே. இவர்கள் அதற்காக அழத்தானே வேண்டும். அப்படிச் செய்யாமல் ஏன் இப்படி ஆனந்தமாய் இருக்கிறார்கள்? ஒருசிலரை அனுப்பி என்ன விஷயம் என்று அறிந்துவரச் சொல்லுங்கள்" என்று கட்டளை இட்டான்.

மந்திரிகள் அனுப்பிய ஆட்கள் போய் இராமரும் இலட்சுமணனும் நாகபாசங்களால் கட்டுண்டு இறக்கவில்லை என்றும் உயிருடன் எப்போதும் போலவே இருக்கிறார்கள்



என்றும் அறிந்து கொண்டார்கள். அவர்கள் திரும்பி வந்து அதனை இராவணனிடம் தெரிவித்தார்கள்.

அதைக்கேட்ட இராவணன் திகைத்துப் போனான். இராமனையும் இலட்சுமணனையும் இந்திரஜித் நாகபாசங்களால் கட்டிப் போட்டானே! அவற்றால் அவர்கள் இறந்துப் போயிருக்கத்தானே வேண்டும்? ஆனால் இறக்காமல் உயிருடன் இருக்கிறார்கள் என்றால் அது எவ்வாறு நிகழ்ந்தது? அவர்களை விட்டு வைக்கக் கூடாது என எண்ணி அவன் தூம்ராட்சன் என்பவனை அழைத்து "நீ பெரிய படையுடன் போய் அந்த இராமனையும் வானரர்களையும் கொன்றுவிட்டு வா" என்று கூறி அனுப்பி



னான.

இராவணனின் கட்டளைப்படி தூம்ராட்சன் பெரிய படையைத் திரட்டிக்கொண்டு ஒரு அழகிய தேரில் அமர்ந்து மேற்கு வாசலுக்குச் சென்றான். படைவீரர்கள் பல வித பயங்கர ஆயுதங்களோடு சென்றனர். அந்தப் படை வருவதைக் கண்டதும் வானரர்கள் பலத்த குரலில் கோஷங்களை எழுப்பிப் போருக்குத் தயாரானார்கள்.

இரு தரப்பினரும் பயங்கரமாகப் போர் புரியலானார்கள். ராட்சஸர்கள் வானரர்களைப் பயங்கர ஆயுதங்களால் தாக்கவே வானரர்கள் அவர்களை எதிர்க்க மரங்களையும் கற்களையும் பயன்படுத்தினார்கள். இப்படி நடந்த போரில் ராட்சஸர்கள் அதிக எண்ணிக்கையில் இறந்தனர். பல ராட்சஸர்கள் போர் புரிவதை விட்டு ஓடிப் போனார்கள். அதைக் கண்ட தூம்ராட்சன் வானரர்களைக் கடுமையாகத் தாக்கலானான். அதனால் பல வானரர்கள் இறந்து போயினர்.

தூம்ராட்சன் இப்படிச் செய்வதைக் கண்டு அனுமார் கடுங்கோபம் கொண்டார். அவர் ஒரு பெரிய பாறையைத் தூக்கி தூம்ராட்சன் அமர்ந்திருந்த தேரின் மீது எறிந்தார். அந்தத் தேர் சுக்கு நூறாகியது. தேரிலிருந்து கீழே குதித்து தூம்ராட்சன் கதாயுதத்தை எடுத்துக் கொண்டு நின்றான். அனுமாரோ மரக்கிளைகளை ஒடித்து ராட்சஸர்களை அடித்து வீழ்த்தலானார்.

ராட்சஸர்களை அடித்து வீழ்த்தியவாறே அனுமார் தூம்ராட்சனை அணுகினார். தூம்ராட்சன் தன் கதையைத் தூக்குவதற்குள் அனுமார் அவனைத் தாக்கினார். அவர் கொடுத்த பலமான அடி தூம்ராட்சனைக் கீழே விழச் செய்ததோடு அவனது உயிரையும் போக்கிவிட்டது. தூம்ராட்சன் ஒழிந்தது கண்டு வானரர்கள் மேலும் உற்சாகம் அடைந்து ராட்சஸர்களை அடித்துத் துரத்தவே அவர்களும் இலங்கை நகருக்குள் ஓடி மறைந்தார்கள்.

தூம்ராட்சன் இறந்தான் என்ற செய்தி கேட்டு இராவணன் ஆத்திர

மும் கோபமும் கொண்டான். அவன் வஜ்ஜிரதம்ஷ்டரன் என்பவனை அழைத்து "நீ போய் இராமன் இலட்சுமணன், சுக்கிரீவன், அனுமார், விபீஷணன் ஆகிய எல்லோரையும் கொன்று விட்டு வா" என்று கூறி அனுப்பினான்.

வஜ்ஜிரதம்ஷ்ட்ரனும் ஒரு பெரிய படையுடன் கிளம்பினான். அவன் மாயப்போர் புரிவதில் கைதேர்ந்தவன். அவனோடு சென்ற ராட்சஸ வீரர்களும் பல பயங்கர ஆயுதங்களை எடுத்துச் சென்றனர்.

வானரப் படைக்குத் தலைமை தாங்கி நின்றவன் அங்கதன். ராட்சஸப் படை வானரர்களைத் தாக்கவே அங்கு பயங்கரப் போர் மூண்டது. ராட்சஸர்கள் பல வானரர்களைக் கொல்வது கண்டு அங்கதன் சீறிப் பாய்ந்து ராட்சஸர்களைக் கொன்று குவிக்கலானான். அவனை எதிர்த்த ராட்சஸர்களின் தலைகள் உடல்களிலிருந்து துண்டிக்கப்பட்டு பந்து போலத் தரையில் உருண்டன.

அங்கதனின் தாக்குதலால் ராட்சஸரர்கள் பயந்து சிதறி ஓடுவதை வஜ்ஜிரதம்ஷ்ட்ரன் கண்டான். அதனால் அவன் வானரப்படை மீது அம்புகளை மழையாகப் பொழியலானான். அங்கதன் உடனே அவன் முன் நின்று எதிர்க்கவே இருவரிடையே கடும் போர் மூண்டது. அங்கதன் அவனது தேரை உடைத்து



அவனைத் தரைமீது நிற்க வைத்து அடித்தான். வஜ்ஜிரதம்ஷ்ட்ரன் தன் நினைவை இழந்து தரைமீது உருண்டான்.

ஆனால் சற்று நேரத்தில் அவன் தன் உணர்வு பெற்று எழுந்து அங்கதனை கதையால் தாக்கினான். அங்கதன் அவனை அடித்து உட்கார வைத்து அவன் தலைமீது ஓங்கி ஒரு அடி கொடுத்தான். அந்த அடி வஜ்ஜிரதம்ஷ்ட்ரனின் ஆயுளை முடித்தது. அது கண்டு வானரர்கள் மகிழ்ச்சியால் ஆரவாரம் செய்தார்கள்.

தான் அனுப்பிய வஜ்ஜிரதம்ஷ்ட்ரனும் இறந்தது கண்டு இராவணன் ஆகம்பன் என்பவனை ஒரு படையுடன் போர்புரிய அனுப்



பினான். ஆகம்பன் தேரில் அமர்ந்து படையுடன் போருக்கு வந்ததும் வானரப்படை அவனைத் தாக்கலா யிற்று. ராட்சஸர்களை குமுதன், நளன், நீலன், மைந்தன், துவிதீயன் முதலானோர் தாக்கலானார்கள்.

ஆகம்பன் அந்த வானர வீரர் களைத் தாக்கச் சென்றான். அவ னது தாக்குதல் மிகவும் கடுமையாக இருக்கவே வானரவீரர்களைப் பாது காக்க அனுமார் விரைந்து சென்றார். ஆகம்பன் அனுமார் மீது அம்பு களை மழைபோல எய்தான். அனு மார் அத்தாக்குதலைப் பொருட் படுத்தாமல் தரை மீது தம் காலால் அடிக்கவே அந்த இடமே பூகம்பம் ஏற்பட்டது போல அதிர்ந்தது.

இதற்குள் அனுமார் ஒரு பெரிய பாறையை எடுத்து ஆகம்பனின் மீது எறிந்தார். ஆனால் ஆகம்பன் தன் அம்புகளால் அதைப் பொடிப் பொடியாகப் போகும்படிச் செய் தான். அது கண்டு அனுமார் கோபம் கொண்டு ஒரு மரத்தைப் பிடுங்கி ஆகம்பனின் தலைமீது ஓங்கி அடித் தார். அந்த அடியைத் தாங்க முடி யாமல் ஆகம்பன் கீழே விழுந்து இறந்தான்.

இதைக் கண்ட ராட்சஸர்கள் பயந்து தம் கைகளிலிருந்த ஆயுதங் களை அங்கேயே போட்டுவிட்டு இலங்கை நகருக்குள் ஓடிப்போனார் கள். ஆகம்பனைக் கொன்று வீழ்த்தி யதற்காக வானரர்கள் அனுமாரைப் பெரிதும் பாராட்டினார்கள். வானமே அதிரும்படி வெற்றி கோஷங்கள் முழக்கினார்கள்.

ஆகம்பனும் இறந்தான் என்று கேட்டதும் இராவணன் பெருத்த யோசனையில் ஆழ்ந்தான். அவன் தன் மந்திரிகளுடன் கலந்து ஆலோ சித்தான். இலங்கை முழுவதிலும் சுற்றி வந்து தன் படை அமைப் பில் என்ன குறை உள்ளது என்று பார்க்கலானான். இலங்கை நகரில் போர் ஏற்பாடுகளுக்கு எந்தவிதக் குறையும் இருந்ததாக அவனுக்குத் தெரியவில்லை. ஆனால் இலங்கைக் கோட்டையைச் சுற்றி வெளியே முற்றுகை இட்டுக் கொண்டிருந்த வானரர்களைப் பார்த்துத்தான் கல் லாய்ச் சமைந்து போனான். எங்கு

பார்த்தாலும் வானரர்களே!

இராவணன் திரும்பி வந்து தன் அரண்மனையை அடைந்தான். அவன் பிரகஸ்தன் என்பவனை அழைத்து "வானரப்படைகள் இலங்காபுரியை முற்றுகை இட்டுக் கொண்டிருக்கின்றன. இந்த முற்றுகையை முறியடிப்பது கடினம் என்றே தோன்றுகிறது. இதனை முறியடிக்க வல்லவர்கள் நான், கும்பகர்ணன், இந்திரஜித், நீ ஆகிய நால்வரே. அதனால் நீ பெரிய படையோடு போய் வானரர்களை எல்லாம் அழித்துவிட்டு வா" என்றான்.

அப்போது பிரகஸ்தன் "இராவணேஸ்வரா! நாம் இது பற்றி முன்பு பேசியது நினைவில் இருக்கிறதா? சீதையை இராமரிடம் ஒப்படைக்காவிட்டால் அழிவு தான் என்று அப்போதே கூறினேன். சீதையை இராமரிடம் ஒப்படைக்க நீங்கள் விரும்பவில்லை. நானும் உங்கள் விருப்பத்திற்கு மாறாக நடக்க இஷ்டப்படவில்லை. உங்களுக்காக என் உயிரையே கொடுக்கத் தயார்" என்றான்.

இதன்பின் பெரிய படையுடன் பிரகஸ்தன் போருக்குக் கிளம்பினான். பிரகஸ்தன் தேரில் அமர்ந்து முரசுகளை முழக்கியவாறே படையோடு சென்றான். அவனுக்குத் துணையாக நராந்தகன், கும்பஹனன் மகாநாதன், சமுன்னதன் என்ற நான்கு மாவீரர்களும் சென்றார்கள்.

பிரகஸ்தன் வருவதைக் கண்டு இராமர் விபீஷணனிடம் "அதோ வரும் ராட்சஸ வீரன் மிகுந்த பலசாலி போலத் தென்படுகிறானே. அவன் யார்?" என்று கேட்டார். விபீஷனும் "அவன் இராவணனின் படைத் தலைவர்களில் ஒருவனான பிரகஸ்தன் என்பவன். இராவணனின் படைகளில் மூன்றில் ஒரு பங்கு இவன் தலைமையில் இயங்குகிறது. இவன் போர்க்கலையில் கை தேர்ந்தவன்" எனக் கூறினான்.

(தொடரும்)






# ஆகாயம் நிற்கும் விதம்!

ஒரு ஊரில் பொன்னன் என்பவன் இருந்தான். அவனுக்கு அறிவு என்பதே இல்லை. தினமும் கூலி வேலை செய்து பிழைத்து வந்தான். ஊரார் அவனை மக்கு என்றே கருதினர்.

ஒரு நாளிரவு பொன்னன் சாப்பிட்டு விட்டுத் திறந்த வெளியில் கட்டிலைப் போட்டுக் கொண்டு அதில் மல்லாக்கப் படுத்துக்கொண்டு ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். அப்போது திடீரென அவனுக்கு விசித்திரமான எண்ணம் ஏற்பட்டது.

அவன் மனதில் "ஆகாயத்தைக் கடவுள் பூமிக்குப் பந்தலாகப் போட்டிருப்பதாகக் கூறுகிறார்களே. ஒரு சிறு பந்தல் போடுவதென்றால் கூட மூங்கில்களைக் கம்பங்கள் போல நட்டுத்தானே அவற்றில் மேல் போடுகிறார்கள். அதனால்தான் பந்தல் கீழே விழாமல் இருக்கிறது. ஆனால் இந்த ஆகாயம் பந்தல் போல நிற்க வேண்டும் என்றால் அதைத் தாங்கி நிறுத்தப் பெரிய பெரிய கம்பங்கள் அல்லவா நிறுத்தப்பட்டிருக்க வேண்டும்? நிற்க ஆதாரம் இல்லாத ஆகாயம் கீழே விழுந்தால் என்ன ஆவது? என் மேல் பட்டு காயமல்லவா ஏற்படும்" என நினைத்தான்.

அவன் உடனே எழுந்து எங்கே ஆகாயம் தன் மீது விழப் போகிறதோ என நினைத்து ஊருக்கு வெளியே ஓடி ஒரு பெரிய மரத்தின் கீழ் நின்றான். அப்போது அவன் மனம் கொஞ்சம் நிம்மதியை அடைந்தது. ஒரு வேளை ஆகாயம் கீழே விழுந்தாலும் அதை அந்த மரம் தாங்கிக் கொண்டு அவனைக் காப்பாற்றுமே.

இரவு முழுவதும் அந்த மரத்தின் கீழ் இருந்து விட்டு அவன் மறு நாள் காலை ஊருக்குள் சென்றான்.

—வி. லாவண்யா—



வழியில் சந்தித்தவர்களிடம் எல்லாம் "கம்பங்களின் ஆதாரத்தில் நிற்காத ஆகாயம் நம் மீது விழுமே. அதனால் நாம் எல்லாம் ஆகாயமே இல்லாத இடத்திற்குப் போய்விடலாம்" என்றான். அது கேட்டு எல்லோரும் அவனைப் பைத்தியம் என்றார்கள்.

பொன்னனோ "இவர்கள் தாமாகப் புரிந்து கொள்ளவில்லை. நான் சொன்னாலும் தெரிந்து கொள்ளவில்லை. எக்கேடு கெட்டுப் போகட்டும். நான் ஆகாயம் இல்லாத இடத்திற்குப் போய் உயிர் தப்புகிறேன்" என எண்ணிக் கொண்டு அந்த ஊரைவிட்டு வெளியேறினான். அவன் காட்டு வழியே போன போது ஓரிருவரைச் சந்தித்தான். அவர்களிடம் கம்பங்களின் மீது நிற்காத ஆகாயம் பற்றிக் கூறவே அவர்களும் "ஆகாயமாவது! கம்பமாவது!! உனக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறதா?" என்று கூறிச் சிரித்துவிட்டுப் போனார்கள்.

பொன்னன் அவர்களுக்கும் எதுவும் தெரியவில்லை என நினைத்துக் கொண்டு அங்கிருந்து சென்றான். வெகுதூரம் போன பின்பு தலை நிமிர்ந்து பார்த்தான். அப்போது ஆகாயம் அவனுக்குத் தெரிந்தது. ஆகாயம் இல்லாத இடத்திற்குப் போக இன்னும் எவ்வளவு தூரம் செல்ல வேண்டுமோ என்று எண்ணி நடக்கலானான்.

மாலையாகி இருட்டியும் விடவே அவன் ஒரு பெரிய மரத்தின் கீழே போய்த் தங்கினான். ஒரு வேளை ஆகாயம் கீழே விழுந்தாலும் அந்த மரம் அதனைத் தாங்கிக் கொண்டு அவனைப் பாதுகாக்கும் என்பது அவனது எண்ணம். அவன் அந்த மரத்தின் கீழ் ஒரு யோகி உட்கார்ந்திருப்பதைக் கண்டு அவரிடம் "நீங்களும் ஆகாயம் விழுந்து விடுமோ என்று பயந்து இந்த மரத்தின் கீழே உட்கார்ந்திருக்கிறீர்களா?" என்று கேட்டான்.

அவரும் பொன்னனின் அறிவு எவ்வளவு எனக்கண்டு "ஆகாயம் விழுவதா?" என்று கேட்டார். பொன்னனும் "ஒரு சிறு பந்தலைத் தாங்க மூங்கில் கம்பங்கள் இருக்

கும். ஆனால் பெரிய பந்தல் போல உள்ள இந்த ஆகாயத்தைத் தாங்க ஒரு கம்பம் கூட இல்லையே'' என்றான்.

யோகியும் ''ஓ! இதுவா உன் சந்தேகம்? ஆகாயத்திற்கும் கம்பங்கள் உள்ளன. அது பற்றி நாளைக் காலை கூறுகிறேன். இப்போது நீ இங்கே படுத்துத் தூங்கு'' என்றார். பொன்னனும் அவர் சொன்னபடியே அங்கேயே படுத்துத் தூங்கினான்.

மறுநாள் அவன் எழுந்ததும் யோகி ''உன் சந்தேகம் தீர நீ இந்தக் காட்டைக் கடந்ததும் தென்படும் கிராமத்துள்போ. அங்கு ஒவ்வொரு வீட்டு வாசலிலும் நின்று அந்த வீட்டுக்காரர்களை நன்கு திட்டு. பிச்சை கேள். கிடைப்பதை எடுத்துக் கொண்டு இங்கேவா'' என்றார்.

பொன்னனும் அந்த கிராமத்திற்குள் போய் ஒவ்வொரு வீட்டு வாசலில் நின்று வீட்டுக்காரர்களை வாய்க்கு வந்தபடித் திட்டிப், பிச்சை கேட்டான். யாரும் அவனுக்குப் பிச்சை போடவில்லை. ஒரு பெண்மணி வந்து ''பாவம். பசித்திருக்கிறாய். அதனால்தான் இப்படித் திட்டினாயா? இந்தா அரிசி'' எனக்கூறி அவனுக்கு அரிசியை அவன் துண்டில் போட்டு விட்டுப் போனாள். பொன்னனும் அந்த அரிசியுடன் யோகி இருந்த மரத் தடிக்கு வந்தான். அவரிடம் நடந்ததைக் கூறினான்.

அவரும் ''பார்த்தாயா? நீ திட்டினாலும் அந்தப் பெண் கோபித்துக் கொள்ளாமல் உனக்குப் பிச்சை போட்டாள். இந்த மாதிரி நல்லவர்கள் ஆயிரத்திலோ, பத்தாயிரத்திலோ ஒருவர்தாம் இருப்பார்கள். இவர்கள் தாம் ஆகாயத்தின் கம்பங்கள். இந்த மாதிரி உலகில் பலர் ஆகாயத்தின் கம்பங்களாக இருப்பதால்தான் ஆகாயம் கீழே விழாமல் இருக்கிறது'' என்றார்.

பொன்னனுக்கு பயம் போயிற்று. அவன் யோகியை வணங்கி அவரது சீடனாகி நல்லறிவு பெற்றான்.





# மாய சாக்குப் பை

வெகு காலத்திற்கு முன் இத்தாலி நாட்டில் சிப்பிலியோ என்ற படை வீரன் இருந்தான். அவன் மிகவும் துணிச்சல் உள்ளவன். ஒருநாள் அவன் ஜனநடமாட்டமே இல்லாத ஒரு காட்டின் வழியே செல்கையில் ஓரிடத்தில் ஒரு வியாபாரியை இரு வழிப்பறித் திருடர்கள் பிடித்து அடித்துக் கொண்டிருப்பதைக் கண் டான். உடனே அவன் அந்த வழிப் பறித் திருடர்கள் மீது பாய்ந்து அவர் களை அடித்துத் துரத்தினான். வியா பாரிக்கு எவ்வித காயமும் ஏற்பட வில்லை எனக்கண்டு அவனிடம் எதுவும் பேசாமல் சிப்பி தன் வழியே சென்று விட்டான்.

படைவீரன் சிப்பியின் இந்தச் செயல் அவனுக்கு பெருத்த நன்மை யையே செய்தது. அந்த வழிப்பறித் திருடர்களிடம் அகப்பட்டவன் வியா பாரி மாறுவேடத்தில் வந்த அந் நாட்டு மன்னன். அவன் சிப்போ ஒரு படைவீரன் எனக்கண்டு அவன் காட்டிய துணிச்சலையும் பாராட்டி னான். அவனை அழைத்து வரச் சொல்லி "இனிமேல் நீ படையில் ஒரு சாதாரண வீரனாக இருக்க வேண்டாம். நீ என் உயிரைக் காப் பாற்றினாய். அதனால் இனிமேல் உன்னை பராமரிக்க வேண்டியது என் பொறுப்பு. நீ இனி எங்கு எப் படி வேண்டுமானாலும் இருக் கலாம். படையில்தான் இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை" என்றான்.

சிப்பிக்கு ஒரே சந்தோஷம். அவன் எப்போதும் சுமந்த ராணு வத் தோள் பையைத் தூக்கி எறிந்து விட்டு திரியலானான். அவனைக் கண்ட ஒரு கிழவீரன் "நீ ஒரு படை வீரனா? அப்படியானால் உன் ராணுவப் பை எங்கே" என்று

—இத்தாலிய நாட்டுப் பழங்கதை—

கேட்டான். அதற்கு சிப்பி "அந்தப் பை இல்லாமல் போனாலும் மன்னர் எனக்கு தாராளமாக மாதா மாதம் பணம் கொடுக்கிறார்" என்றான்.

கிழவனும் "அப்படியானால் நீ எப்போதும் வைத்துக் கொள்ள நான் உனக்கு ஒரு பை கொடுக்கிறேன். இது ஒரு மாயமந்திரப் பை. இதன் வாயைத் திறந்து உன் எதிரில் உள்ளவனை "இதில் நுழை" என்றால் அவன் இதற்குள் போய் விடுவான். நீ இதன் வாயை உடனே கட்டி விட்டால் அவன் வெளியே வர முடியாது. நீயாக வாயை அவிழ்த்து விட்டாலே அவன் வெளியே வரமுடியும். இது பல வருடங்களாக எனக்கும் பயன்பட்டது. கிழவனான எனக்கு இனி இது வேண்டாம். நீயே வைத்துக் கொள்" எனக்கூறி ஒரு சாக்குப் பையைக் கொடுத்தான்.

சிப்பியும் அந்தப் பையை வாங்கி உண்மையிலேயே அந்தப் பைக்கு அப்படிப்பட்ட சக்தி இருக்கிறதா என்று பரீட்சித்துப் பார்த்தான். அதற்கு அவ்வித சக்தி இருப்பது கண்டு அவன் திருப்தி அடைந்தான். அவன் அந்தப் பையோடு தலை நகரில் இருக்கலானான். ஒருநாள் நகரமே ஒரே சோகக் கடலில் மூழ்கி இருப்பது கண்டு என்ன விஷயம் என்று அவன் விசாரித்தான்.



அப்போது ஒருவன் "உனக்கு விஷயம் தெரியாதா? இன்று நள்ளிரவு நாகலோகத்திலிருந்து சைத்தான் வந்து அரசகுமாரியைத் தூக்கிக் கொண்டு போகப் போகிறான். சில வருடங்களுக்கு முன் சைத்தான் மன்னனிடம் அப்படி ஒரு பத்திரம் எழுதி வாங்கிக் கொண்டான். மன்னன் கட்டாயத்தின் பேரில் அதில் கையெழுத்துப் போட்டான். அதன்படி மன்னன் இன்றிரவு தன் மகளைச் சைத்தானிடம் ஒப்படைத்தாக வேண்டும்" என்றான்.

உடனே சிப்பி அரண்மனைக்குப் போய் மன்னனைக் கண்டு "நான் உங்கள் மகளை சைத்தான் தூக்கிச் செல்லாமல் காத்து உங்களிடம்



ஒப்படைக்கிறேன். ஆனால் எனக்கு ராஜகுமாரியின் அறையை அடுத்த ஒரு அறையைக் கொடுக்க வேண்டும். அதன் வழியாக மட்டுமே சைத்தான் அரசகுமாரியின் அறைக்குச் செல்லக் கூடியதாக இருக்க வேண்டும்'' என்றான்.

மன்னனும் ''சரி. உன் இஷ்டப்படி செய்கிறேன். நீ துணிச்சல் உள்ளவன் என்பது எனக்குத் தெரியும்'' எனக்கூறி அவனுக்கு அரசகுமாரியின் அறைய்யை அடுத்துள்ள ஒரு அறையைக் கொடுத்தான். சிப்பியும் அங்கு தன் மாயப் பையுடனும் ஒரு தடியுடனும் இருந்தான். அறையில் ஒரு மேஜை மீது காகிதம், பேனா, மைக்கூடு எல்லாம் இருந்தன.

சிப்பி வாசல் பக்கம் தன் பையுடன் தயாராக நின்றான். சரியாக இரவு பனிரெண்டு மணிக்கு நிலம் அதிர்ந்தது. இடி இடித்தது அறையில் கந்தக வாசனை வர சைத்தான் சிப்பி இருந்த அறைக்குள் வந்தான். சிப்பி தன் பையின் வாயைத் திறந்து 'இதில் நுழை' எனவே சைத்தான் அதற்குள் போய்விட்டான். சிப்பி சட்டென அதன் வாயை இறுகக் கட்டி விட்டான்.

சைத்தான் அந்த மாயப் பையிலிருந்து வெளியே வரமுயன்றான். ஆனால் அந்தப் பையின் மந்திரசக்தி அவனை அமுக்கியது. பைக்குள் அகப்பட்ட அவன் திணறினான். கத்தினான். உறுமினான். மிரட்டினான். எதுவும் பலிக்காமல் போகவே தான் பையிலிருந்து வெளியே வந்தால் அரசகுமாரியை ஒன்றும் செய்வதில்லை என்றும் தன்னை விட்டு விடும்படியும் கெஞ்சினான்.

சிப்பியோ ''அதெல்லாம் இல்லை. நீ இனிமேல் அரசகுமாரி விஷயத்தில் தலையிடாமல் இருப்பதாகவும் அவளைக் கவர்ந்து செல்வதில்லை என்றும் எனக்கு எழுதித் தரவேண்டும்'' என்றான். ''முடியாது. நீ என்ன செய்வாய்?'' என்று சைத்தான் கூறவே சிப்பியும் ''அதைச் செய்து காட்டுகிறேன் பார்'' என்று கூறித் தடியை எடுத்து

சாக்குப்பை மீது அடிக்கலானான். அதனுள்ளிருந்த சைத்தானுக்கு அடிகள் பலமாக விழுந்தன.

முடிவில் சைத்தான் சிப்பி கோரியபடி சாக்குப் பைக்குள்ளிருந்து தன் கையை வெளியே நீட்டிப் பத்திரம் எழுதி சிப்பியிடம் கொடுத்தான். அதை வாங்கிக் கொண்ட பிறகே சிப்பி பையின் வாயை அவிழ்த்தான். அதிலிருந்து சைத்தான் விடுபட்டு வெளியே வந்தான். அவன் "இனி நான் நீ இருக்கும் இடத்திற்கு வரவே மாட்டேன். என் நரகலோகத்திற்கே போய் விடுகிறேன்" என்றான். மறுநிமிடம் ஒரு மின்னல் வெட்டியது. அறையிலிருந்த கந்தக வாசனையும் போயிற்று. சைத்தானும் மாயமாய் மறைந்தான்.

மன்னனும் அரசகுமாரியும் மற்றும் பலரும் சிப்பியைப் பெரிதும் புகழ்ந்தார்கள். அவனைப் பாராட்டி மன்னன் ஒரு பெரிய விருந்தும் அளித்தான். சிப்பி இவற்றை எல்லாம் மிகவும் பணிவுடன் ஏற்றுக் கொண்டான்.

இதற்குப்பின் சிப்பிக்குத் தலைநகரிலேயே அடைந்து கிடக்கப் பிடிக்கவில்லை. பல ஊர்களுக்குப் போய் வரலாம் என்று எண்ணி அவன் கிளம்பினான். அவன் போகும் வழியில் ஒரு நதிக்கரையில் ஒரு சிறிய குடிலையும் அதைச்சுற்றி அழகிய பூந்தோட்டம் இருப்பதையும் கண்டான். அந்த அழகிய இடத்தில் இருந்து தன் எஞ்சிய வாழ்நாட்களைக் கழிப்பது என்று அவன் தீர்மானித்துக் கொண்டான்.





அவன் அங்கேயே சில ஆண்டுகளைக் கழித்தான். ஒருநாள் அவன் இருக்கும் இடத்திற்கு ஒரு அதிசய மனிதன் வந்தான். அவன் கருப்பாயும் கம்பீரமாயும் விளங்கினான். அவனைக் கண்ட சிப்பி "நீங்கள் யாரோ?" என்று மரியாதையுடன் கேட்டான்.

வந்தவனும் "நான்தான் மரண தேவன்" என்றான் மறுநிமிடமே சிப்பிதன் மாயப் பையை எடுத்து 'இதில் நுழை' என்றான். மரண தேவன் பைக்குள் போனதும் சிப்பி அதன் வாயை இறுகக் கட்டி விட்டான். மரணதேவன் பைக்குள் அடைபட்டுக் கிடந்தான். ஆனால் சிப்பி அவனைத் துன்புறுத்தவில்லை. அவனோடு நட்புறவு கொண்டாடினான். நல்லவிதமாகவே பேசினான்.

மரணதேவனோ சிப்பியை மிரட்டிப் பார்த்தான். கோபத்தால் திட்டினான். தன்னை வெளியே விடும்படி உறுமினான். ஆனால் சிப்பி அவனை மட்டும் விடவில்லை. மரணதேவன் சிறைப்பட்டதால் உலகில் ஒருவன் கூடச்சாகவில்லை. உயிருக்கு மன்றாடிக் கொண்டிருந்தவர்கள் அப்படியே அவஸ்தைப் பட்டுக் கொண்டிருந்தார்கள். விபத்துக்கள், போர்கள் எனப் பல நடந்தும் அவற்றில் எதிலும் யாரும் சாகவில்லை.

வயதானவர்கள், நோயாளிகள் பசி, பட்டினியால் வாடியவர்கள் போன்றவர்களும் மரணத்தை ஆவலுடன் எதிர்பார்த்தும் அது அவர்களுக்குக் கிட்டவில்லை. மரண தேவன் இவர்களைப் பற்றி எல்லாம் சொல்லி உலகில் மரணம் இல்லாது போனதால் ஏற்பட்டுள்ள அவல நிலையை சிப்பிக்கு விளக்கினான்.

அப்போது சிப்பி "சரி. உன்னை நான் விடுதலை செய்கிறேன். ஆனால் ஒரு நிபந்தனை. நான் உன்னைக் கூப்பிட்டாலே நீ வந்து என் உயிரைக் கவர்ந்து செல்ல வேண்டும். சம்மதமா?" என்று கேட்டான். தான் சாக்குப்பையிலிருந்து வெளியே போனால் போதும் என்று நினைத்த மரண

தேவன் சிப்பியின் அந்த நிபந்தனைக்கு இணங்கினான். சிப்பியும் பையின் வாயை அவிழ்த்து விட, மரணதேவன் அங்கிருந்து தன் லோகத்திற்குச் சென்றான்.

அவன் தான் அடைப்பட்டுக் கிடந்த காலத்தில் ஏற்படாத மரணங்களை விரைவில் ஏற்படுத்த பல போர்களும் கொடிய வியாதிகளும் பூவுலகில் பரவி பல மரணங்களை ஏற்படச் செய்தான். ஆனால் வாக்களித்தபடி அவன் சிப்பியின் உயிரை மட்டும் கவரவில்லை.

சிப்பி சில ஆண்டுகளைச் சந்தோஷமாகக் கழித்தான். மெதுவாக அவனுக்கு வாழ்க்கையில் அலுப்பு தட்டியது. அவனது நண்பர்கள், உற்றவர், உறவினர் என்று எல்லோருமே இறந்து கொண்டே இருக்க அவன் மட்டும் உயிரோடு இருந்தான். அந்நாட்டு மன்னனும் அரசகுமாரியும் கூட இறந்து போனார்கள். இதை எல்லாம் கண்டு சிப்பி தன்னை அழைத்துக் கொண்டு போகும்படி மரணதேவனுக்குத் தகவல் அனுப்பினான்.

மரணதேவனோ "நான் சிப்பியை மறுபடியும் பார்க்கவே மாட்டேன்" என்று பதில் அனுப்பினான். அதைக் கேட்ட சிப்பி "மரணதேவன் என்னை சொர்க்கத்திற்கோ நரகத்திற்கோ கொண்டு செல்லாவிட்டால் நானே அங்கு



இந்த உடலோடு போகிறேன்" என்று தீர்மானித்துக் கொண்டான். தனக்கு ஒருவேளை சொர்க்கத்தில் இடம் கிடைக்காதோ எனச் சந்தேகப்பட்டு அவன் முதலில் நரக லோகத்திற்குச் சென்றான்.

சிப்பி நரகலோகத்தின் தலை வாசலை அடைந்து கதவைத் தட்டினான். வாயிற்காப்போன் அவனைப் பற்றிய விவரம் தெரிந்துகொண்டு நரகத்தின் அதிபனான சைத்தானிடம் சிப்பி வந்திருப்பதாகக் கூறினான். சைத்தானோ "ஐயோ! சிப்பியா? அவனை உள்ளே வர விடாதே. இங்கிருந்து எங்கேயாவது போகச் சொல்" என்றான்.

தனக்கு நரகத்தில் இடம் இல்லை என்று கேட்டதும் சிப்பி சொர்க்

கத்திற்குச் சென்றான். அங்கு வாயிற் காப்போனிடம் அவன் தன்னைப் பற்றிக் கூறிதான் உள்ளே போக விரும்புவதாகக் கூறினான். அவனும் "நான் தேவனிடம் சொல்லி அவர் என்ன பதில் சொல்கிறார் என்று வந்து கூறுகிறேன்" என்று சொல்லி விட்டுப் போனான். அப்போது சிப்பி தன் தொப்பியை சொர்க்கலோகத்திற்குள் போய் விழும்படி விட்டெறிந்தான்.

சற்று நேரத்தில் திரும்பி வந்த வாயிற்காப்போன் சிப்பியிடம் "உன்னை தேவன் உள்ளே அனுமதிக்க மறுக்கிறார். நீ செய்த ஒரே நல்ல செயல் சைத்தானை அடித்ததுதான் அந்த ஒரு நற்செயலால் நீ சொர்க்கத்தை அடைய முடியாது. எனவே இங்கிருந்து போய் விடு" என்றான்.

அப்போது சிப்பி "ஆமாம் எனக்கு சொர்க்கத்திலும் இடம் இல்லை. நரகத்திலும் இடம் இல்லை. எனக்கு மரணமும் கிடையாது. இது ஒரு சிக்கலான பிரச்னைதான். அது சரி, என் தொப்பி உள்ளே இருக்கிறது. அதை மட்டும் நான் எடுத்துக் கொள்ள அனுமதி" என்றான். வாயிற்காப்போனும் "சரி எடுத்துக் கொண்டு வா" என்று கூறி உள்ளே அனுப்பினான்.

உள்ளே போன சிப்பி தன் தொப்பியின் மீது உட்கார்ந்து விட்டான். எழுந்து வரவே இல்லை. வாயிற்காப்போன் வந்து அவனை எழுந்து போகச் சொன்ன போது சிப்பி "நான் எனக்குச் சொந்தமான தொப்பியின் மீது தான் உட்கார்ந்திருக்கிறேன். அதை விட்டுப் போகச் சொல்ல சட்டப்படி யாருக்கும் உரிமை இல்லை" என்றான்.

விஷயம் தேவனிடம் போகவே அவரும் "சொர்க்கத்தில் புகுந்து விட்டவரை வேறு எங்கும் அனுப்ப முடியாது. சிப்பி இங்கேயே இருக்கட்டும்" எனக் கூறிவிட்டார்.



# இயற்கை விநோதங்கள்

## வேகமாய் வளரும் மூங்கில்கள்

தாய்லாந்து, மலேயேஷியா, இந்தோனேஷியா ஆகிய நாடுகளில் பரவலாகத் தென்படும் மூங்கில் புதர்கள் வெகுவேகமாக வளர்கின் றன. ஒரு நாளில் இவை ஒரு மீட்டர் உயரம் வளர்ந்து விடுகின்றன. ஆனால் நம் நாட்டு மூங்கில்களோ ஏழெட்டு வாரங்களில்தான் ஒரு மீட்டர் உயரம் வளர்கின்றன!





## முன்னெச்சரிக்கை

வரப்போகும் இயற்கை விபரீதங்களை முன் கூட்டியே அறிந்து கொள்ளும் சக்தி பிராணி களுக்கு உண்டு என நிபுணர்கள் கருதுகிறார் கள். பூகம்பம், புயல், எரிமலை வெடிப்பு முதலியவற்றை வெகு முன்னதாகவே மீன்கள் அறிந்து கொண்டு விடுகின்றன. ஜெல்லி மீன்கள் புயல் அடிக்கப் போவதை 15 மணி நேரத்திற்கு முன்பே அறிந்து கரையிலிருந்து கடலில் குதித்து ஆழமான இடத்திற்குப் போய் விடுகின்றன. கடலடிப்பரப்பில் வாழும் மீன் கள் மேல் பகுதிக்கு வந்து விடுகின்றன. ஜப்பா னில் அடிக்கடி பூகம்பம் ஏற்படுவதால் மீன் காட்சி சாலைகளிலுள்ள மீன்கள் பூகம்பம் வரு வதற்கு வெகு நேரத்திற்கு முன் தம் தொட்டி களில் மேலும் கீழுமாகத் துள்ளி விழுகின்றன.

## கரையான் புற்று மலைகள்!

சில வகைக் கறையான்கள் தரைமீது தம் புற்றுக்களைச் சிறுகுன்றுகள் போல உருவாக்கு கின்றன. இவை 21 அடி உயரம் கூட இருக்கு மாம். ஒரு சிறு கறையானுக்கு இது இமயமலை போலத் தோன்றும்.



# Don't you owe the










Foxy is my name
But I'm oh-so tame

Tonight y
Tomorr

## போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1992 ஆகஸ்டு மாத இதழில் வெளியிடப்படும்**



M. Natarajan



M. Natarajan

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம. இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ ஜூன் 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும். ★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்பு களுக்கு ரூ. 100/—பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க் கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 C26

---

### ஏப்ரல் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : உதயத்தை நோக்கிச் சிறுவர் பயணம்

இரண்டாவது போட்டோ : அஸ்தமனத்தை நோக்கிப் பெரியவர் பயணம்

பரிசு பெற்றவர் : கி. கல்யாணி, திண்டுக்கல்-9

பரிசுத் தொகை ரூ. 50/- இம்மாதக் கடைசிக்குள் அனுப்பி வைக்கப்படும்.


## அம்புலிமாமா

இந்தியாவில் ஆண்டு சந்தா ரூ. 48-00

சந்தா அனுப்பவேண்டிய முகவரி :

டால்டன் ஏஜென்சீஸ், சந்தமாமா பில்டிங்ஸ், வடபழனி, சென்னை-600026

Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

**CASIO**

## தாளம் அமையட்டும்
## இசை முழங்கட்டும்!



கேஸியோ கீபோர்டு கொண்டு இசை அமைப்பது மிகவும் எளிதானது. ஏனெனில் அவற்றிலுள்ள சிறப்பம்சங்கள் உங்களை ஒரு இசை மேதையைப் போல் இயக்க வைத்திடும். சுருதியைக் கூட்டி, தாளம் அமைத்து உங்களுக்குப் பிடித்தமான பாட்டுடன் இயக்குங்கள். கேஸியோ இருப்பதால் உங்கள் இசை முழக்கம் ஒரு தனிக் கவர்ச்சி பெறும்.

SOUND KIDS










**CITY MUSIC CO., PTE LTD.**
Singapore Tel 3377058, 3377545

**ONFLO MUSIC CO., LTD.**
Hong Kong Tel: 722 4195

**RAINBOW PHOTO FINISHERS PTE LTD.**
Nepal, Kathmandu Tel: 221724

**GENERAL ENTERPRISES COMPANY**
U.A.E., Dubai Tel: 224131/2/3

**MAHMOOD SALEH ABBAR CO.**
Saudi Arabia, Jeddah Tel: (02)6473995

**ARABIAN CAR MARKETING CO., LTD.**
Oman Tel: 793741

**CASIO COMPUTER CO., LTD.**
Tokyo, Japan

M-9111 RAPCI TM